# பிரதிபா பிரசுரம்
# 2016–ல் வெளிவந்த புத்தகங்கள்

## மந்த்ர ஜப கல்பமஞ்சரி
(130 மந்திரங்கள் அடங்கியுள்ளது,)

## தேவி காயத்ரீ
(தத்துவ விளக்கங்கள். சந்தியா வந்தனம்,
மஹாசங்கல்பம், காயத்ரீ ஸ்துதிகள்
கயாத்ரீ ஹோமம் மற்றும் சகஸ்ரநாமத்துடன்)

## குரு தத்துவம்
(உபதேச மஞ்சரியுடன்)

## ஏன் பள்ளி கொண்டீர்
(பெருமாளின் கிடந்த திருக்கோல தத்துவ விளக்கம்)

விவரங்களுக்கு

**பிரதிபா பிரசுரம்**
"லலிதாலயா"
95/1 ஆடம் தெரு, மயிலாப்பூர்
சென்னை – 600 004 போன் : 24640720

# தேவி புவனேஸ்வரி

(புவனேஸ்வரி ஜபம், பூஜை, திரிசதி புதுக்கோட்டை அதிஷ்டான மகான்களின் வரலாறுகளுடன்)

ஆசிரியர்
ஸ்ரீ வித்யா ஞானபாஸ்கரா
நஜன்
(எஸ். நடராஜன்)



பிரதிபா பிரசுரம்
தோற்றம் : நவராத்ரி 1973

புவனேஸ்வரி ஆலய கும்பாபிஷேகத்தின் போது (1977–ல்) முதல் பதிப்பாக வெளியிடப்பட்டது.

நிறுவனர் :
என். லலிதாம்பாள்

பிரதிபா பிரசுரம்
"லலிதாலயா"
95/1, ஆடம் தெரு, மயிலாப்பூர்
சென்னை – 600 004 Phone : 24640720

 (விலை ரூ. 70–00

தேவி புவனேஸ்வரி
(DEVI BHUVANESWARI)



முதற் பதிப்பு : மார்ச் 1977
மறுபதிப்புகள் : 1979, 1998
நான்காம் பதிப்பு : டிசம்பர் 2017

பிரதிபா பிரசுரம்
14

விலை : ரூ. 70-00

---

பொருளடக்கம்



---

Typeset by MADURAM LASER PRINT - Chennai - 4.
Printed by AGARAM PRINTECH - Chennai - 5.

# ஆசிரியரின் முகவுரை

1976-ம் ஆண்டில் ஜெய துர்க்கா, துர்க்கா ஸூக்த ஹோமம் புவனேஸ்வரி அதிஷ்டானத்தில் நடைபெற்ற போது ஒருநாள் முழுவதும் தங்கி பக்தி பரவசத்தில் மிதந்தேன். அதற்குப் பின்பும் பலநாள் வரை அந்த துர்க்கா மந்திரங்கள் என் காதில் ரீங்காரமிட்ட வண்ணமிருந்தன. அன்னை புவனேஸ்வரி பற்றியும் அந்த அதிஷ்டான மகான்களைப் பற்றியும் ஒரு புஸ்தகம் எழுதவேண்டும் என்று மனதில் பட்டது. ஆனால் இவ்வளவு சீக்கிரம் (ஓர் ஆண்டு முடிவதற்குள்ளேயே) இப் புத்தகம் வெளிவரும் என்று எதிர்பார்க்க வில்லை. அம்பிகை யின் திருவுள்ளம் அவள் காரியத்தை இவ்வளவு சீக்கிரம் நிறைவேற்றி வைத்துள்ளது.

ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள் "ஸ்ரீ வித்யோபாஸக ஞான பாஸ்கரா" என்று பட்டம் அளித்து எனக்கு அருளாசி வழங்கிய போது "ஞான சூரியன் என்கிறீர்களே அகல் இருந்தால் எண்ணை இல்லை, எண்ணெய் இருந்தால் திரி இல்லை" என்கிறேன். "சூரியனுக்கு அதெல்லாம் தேவையில்லை. அம்பிகை அருள் இருக்க ஏன் குறைபட்டுக்கொள்கிறாய்" என்றார். அம்பிகையே ஆசார்ய ரூபத்தில் வந்து அனுக்கிரஹத் திருக்கிறாள். இல்லையேல் இப்புத்தகம் இவ்வளவு சீக்கிரம் உருவாகியிருக்க முடியாது. இது சம்பந்தப்பட்ட விஷயங்கள் எல்லாம் தேடிய போது அவை கிடைத்து அதிசயங்கள் என்னை அப்படி நம்ப வைத்திருக்கிறது.

புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் சமாதி கொண்டுள்ள "ஜட்ஜ்" சுவாமிகள், ஸ்ரீமத் சுயம்பிரகாச அவதூதப் பெரிய வர்கள், ஸ்ரீமத் சதாசிவ பிரும்மேந்திரர், தத்த பகவான் இவர் களைப்பற்றி கிடைத்த விவரங்கள் இப்புத்தகத்தில் சேர்க்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீபுவனேஸ்வரி மாதா ஆலயகும்பாபி ஷேகப் பெரும் பணியில் சேது அணைகட்ட அணில் தன்னாலானதை உதவியதைப் போல என்னால் இந்த கைங்கரியம் செய்யமுடிந்தது. ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமி களுக்கு முதலில் தெரிவித்தபோது உடனே அனுக்கிரஹித்து அருளாசி வழங்கினார். அவர் பொற்பாதங்களில் பணிந்து மேலும் மேலும் அன்னைக்குத் தொண்டு செய்ய அர்ப்பணித்துக் கொள்கிறேன்.

மயிலாப்பூர்
15 - 03 - 1977.

எஸ். நடராஜன்.
(நஜன்)

# பதிப்பாசிரியர் நன்றி

பிரதிபா பிரசுர தேவி நூல்கள் வரிசையில் "தேவி புவனேஸ்வரி" இடம் பெற்றது ஓர் அதிசயமாகும். "நினைப்பதெல்லாம் நடப்பதென்றால் தெய்வம் ஏதுமில்லை" என்று ஒரு பாட்டு. இங்கு நினைத்தது நடந்திருக்கிறது. அதுவும் மிகக் குறைவான அவகாசத்தில் ஆகவே தெய்வம் இல்லை என்று சொல்லிவிட முடியாது.

புவனங்களுக்கெல்லாம் ஈஸ்வரி புவனேஸ்வரி, ஈரேழு புவனங்கள் அதாவது 14 புவனங்கள் என்பது கணக்கு. தேவி புவனேஸ்வரி புஸ்தகம் பிரதிபா வரிசையில் 14வது. இப்பொருத்தத்திலேயே அம்பிகையின் அருளைக் காண்கிறோம்.

அம்பிகை ஆசார்ய ரூபத்தில் விளங்குவதாகவே ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள் எங்களுக்குத் தோற்றமளிக்கிறார். அவர் அருளாசியைப் பெற்று இந்த வேளையில் ஈடுபட்டோம்.

ஸ்ரீகாஞ்சி காமகோடி ஜகத்குரு அவர்கள் ஸ்ரீமுகம் அளித்து அனுக்கிரஹித்திருக்கிறார்கள். அவருக்கு எங்கள் நமஸ்காரம். புதுக்கோட்டையிலேயே வசித்து வக்கீல் தொழில் நடத்திய வரும் ஸ்ரீமத் சுயம்பிரகாச பிரும்மேந்திரரின் சிஷ்யரும் ஸ்ரீமத் சாந்தானந்தர் அவர்களின் அன்பருமான ஸ்ரீ டி.ஆர், ராஜ கோபாலய்யர் இப்புத்தகத்திற்கு முகவுரை எழுத மிகவும் பொருத்தமானவர். அவர் எங்கேயோ ஹைதராபாத்தில் தள்ளாத நிலையில் இருப்பவர். அவர் வீடு தேடி வந்து இந்த முன்னுரையை எழுதி ஆசிர்வதித்திருப்பது புவனேஸ்வரியின் அனுக்கிரகமில்லாது வேறு என்ன?

ஆச்சாள்புரம் சாக்தரத்னம் ஸ்ரீ கோவிந்தராஜ பிள்ளை அவர்கள் புவனேஸ்வரியையும் அஷ்டதசபுஜ, மகாலக்ஷ்மியையும் பெரியபடமாக வரைந்து ஆராதிப்பவர். அவர் எங்கள் பணியை ஆரம்ப முதற்கொண்டே உதவி ஊக்குவிப்பவர். இப்புத்தகத்தை அவருக்கு காணிக்கை யாக்கியிருக்கிறோம். அவருடைய உதவியாளராகப் பணிபுரியும் ஸ்ரீ தியாகேசக் குருக்களுக்கும் எங்கள் நன்றி.

டாக்டர் நஜன் (எஸ். நடராஜன்) அவர்களின் நூற்றாண்டை (1917 – 2017) யொட்டி வெளிவரும் இப்புத்தகத்தின் மறுபதிப்புக்கு நிதி உதவி அளித்த திரு. ராஜேந்திரன் மற்றும் நரேஷ் (பிரான்ஸ்) அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியினை தெரிவித்துக்கொள்கிறோம்.

**என். லலிதாம்பாள்**
பதிப்பாசிரியர்

## ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்



## ஸ்ரீ முகம்

ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் பரிபூர்ண ஆசிர்வாதத்துடன் அனுக்கிரகம் செய்து தெரிவிப்பதாவது :

ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறே பதம் பார்ப்ப,, மாதிரி தெய்வ சிந்தனையில் ஊறிய, நல்லறிவும் நல்லொழுக்கமும் நல்ல மனமும் அன்பும் பண்பும் நிறைந்தவர்களில் ஒருவராக எஸ். நடராஜன் (நஜன்) விளங்குகிறார்.

ஸ்ரீ வித்யா ஞானபாஸ்கரர் நஜன் எந்த தெய்வத்தைப் பற்றி புஸ்தகம் எழுதினாலும் அந்த தெய்வத்தைப்பற்றிய புராணம், மந்திர சாஸ்திரம், மற்றும் அத்தெய்வங்களை இப்பாரத நாட்டில் எங்கெல்லாம் பிரதிஷ்டை செய்துள்ளார்கள் என்கிற விவரங்களை எல்லாம் அலசி ஆராய்ந்து பழத்தைப் பிழிந்து ரஸமாகத் தருவதைப்போல நன்மக்களுக்குத் தெய்வீகம் நிறைந்த புஸ்தகங்களைக் கொடுப்பதையே தனது விரதமாகவும் தபஸாகவும் கொண்டிருக்கிறார், "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்கிற மகாத்மாக்களின் சங்கல்பத்தை நஜன் உறுதியாகப் பற்றிக்கொண்டு விட்டார் என்பதை நாம் நம்புகிறோம். நஜனின் இந்த அழிவற்ற புஸ்தகங்கள் உலகோத்தமர் களுக்கு மேலும் ஈஸ்வர பக்தியையும் ஆசார்ய பக்தியையும் நிச்சயம் ஏற்படுத்தும்.

தொடர்ச்சி 8ம் பக்கம்

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி**
**ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள்**
**ஸ்ரீமடம், காஞ்சீபுரம்**

**முகாம் கோட்டையூர் (காரைக்குடி வழி) தேதி 6 - 3 - 1977.**



# ஸ்ரீமுகம்

"கருணை காமட்சி" முதலிய பல தெய்வீக நூல்களை இயற்றியுள்ள ஸ்ரீ நடராஜன் (நஜன்) இப்போது எழுதியுள்ள "தேவி புவனேஸ்வரி" என்னும் நூல் பராசக்தியின் மஹிமைகளை அதாவது த்ரிமூர்த்திகளையும் அடக்கி ஆள்வது எல்லா உலகங்களுக்கும் ஈஸ்வரியாயிருப்பது, காயத்ரீ ஸ்வரூபிணியாயிருத்தல் முதலிய விசேஷங்களை கேனோபநிஷத், தேவீ பாகவதம் முதலிய பிரமாணங்களை ஆதாரமாகக் கொண்டு லலிதமான, உருக்கமான தமிழ் நடையில் விவரிக்கிறது.

ஆஸ்திகர்கள், பொருத்தமாக புதுக்கோட்டையில் விளங்கும் ஸ்ரீ புவனேசவரி தேவியின் ஆலய கும்பாபிஷேக சமயத்தில் வெளியிடப்படும் இந்த சிறந்த நூலை படித்து பராசக்தியின் மஹிமைகளை அறிந்து வழிபட்டுக்கொண்டு இந்த தேவியின் அனுக்ரஹத்தினால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

**நாராயண ஸ்மிருதி**

# முகவுரை

ஸ்ரீ டி. ஆர். ராஜகோபாலய்யர் அட்வகேட், புதுக்கோட்டை (சேந்தமங்கலம் ஸ்ரீமத் சுயம்பிரகாச அவதூத சுவாமிகளின் சிஷ்யர்)

புதுக்கோட்டையுடனும் ஸ்ரீ புவனேஸ்வரி அதிஷ்டானத்துடனும் பின்னிப் பிணைந்திருந்த அடியேன் ஸ்ரீ புவனேஸ்வரி பற்றியும் அந்த அதிஷ்டானத்தைப் பற்றியும் ஸ்ரீ "நஜன்" எழுதிய இந்நூலுக்கு முகவுரை எழுத நேர்ந்ததே ஓர் அதிசயம். இந்நூலுக்கு ஒரு முகவுரை எழுதும்படி ஸ்ரீ எஸ்.நடராஜன் கேட்டுக்கொண்டதில் ஒரு கண்ணுக்குக்காணாத பிணைப்பு இருக்கிறது. சில காலம் முன் பம்பாய் பவன்ஸ் ஜர்னல் ஆசிரியர் "ஏன் பள்ளி கொண்டீர்?" என்ற நூலை விமர்சனம் எழுத எனக்கு அனுப்பி வைத்தார். இவ்வளவு அருமையான விஷயங்களை அரும்பாடுபட்டு திரட்டி எழுதியவர் யாரோ? என்று அதிசயித்தேன். சமீபத்தில் சென்னை வந்தபோது என் உறவினர் ஸ்ரீ எஸ்.வி. சுவாமியிடம் என் பழைய நண்பர் ஸ்ரீ எஸ். நடராஜன் விலாசம் விசாரித்து அங்கு சென்றேன். 'ஏன் பள்ளி கொண்டீர்' சிருஷ்டிகர்த்தா அவர்தான் என்பதை அறிந்து ஒருபுறம் மகிழ்ச்சி, ஒருபுறம் இவரைத்தவிர வேறு யார் இதை எழுதியிருக்க முடியும்? என்ற எண்ணமும் தோன்றியது.

"தேவி புவனேஸ்வரி" நூலை தான் தயாரித்து வருவதைக் குறிப்பிட்டு இதற்கு நீங்கள்தான் முகவுரை எழுத வேண்டும் என்று கேட்டபோது எனக்கு ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. அவ்வேண்டுகோளை தேவி புவனேஸ்வரியின் ஆக்ஞையாகவும் திருவருளாகவும் மதித்து உடனே ஒப்புக்கொண்டேன். புதுக்கோட்டை நான் வளர்ந்து பணியாற்றிய ஊர். புவனேஸ்வரி என்று சொன்னாலே அது புதுக்கோட்டையைத் தான் நினைவுப்படுத்தும், எனது குருநாதர் ஸ்ரீமத் சுயம்பிரகாச பிருமேந்திர அவதூத ஸ்வாமிகள், அவர் குருநாதர் 'ஜட்ஜ்' ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தை அறிந்து அதில் கட்டிடம் அமைத்தபின் என்ன மாறுதல்? நாங்கள் சில வக்கீல்கள் நிதி திரட்டி முள்ளுக் காட்டை நந்தவனமாக்கினோம். மனோ வாக்கு காயங்களால் பொருளால் பக்தி சிரத்தையால் எழுப்பப்பட்ட அதிஷ்டானத்தின் பிறப்பு வளர்ப்பு மாறுதல்களுடன் இணைந்தவன் நான். 'ஜட்ஜ்' ஸ்வாமிகள் என் பரமகுரு. கண்வரிஷியால் துஷ்யந்தன் வீட்டுக்கு விடாப் பிரியத்துடன் வழி அனுப்பப்பட்ட சகுந்தலையைப் போல 'ஜட்ஜ்' ஸ்வாமிகளின் பஞ்சலோக விக்ரகத்தை என் குருநாதர் பிரிய மனமில்லாமல் என் மூலம் கொடுத்து அனுப்பினார். அதை சேந்தமங்கலத்திலிருந்து என் மடிமீது வைத்து புதுக்கோட்டை அதிஷ்டானத்திற்கு கொண்டு வந்து சேர்த்தேன்.

தொடர்ச்சி பக்கம் ...

ஜகஜ்ஜனனியும் ஆதிபராசக்தியுமான ஸ்ரீமாத புவனேஸ்வரி தேவியின் மகிமையையும், அன்னையின் மஹாமந்திர சாஸ்திரத்தையும் அந்த ஜகன் மாதவை சக்தி தாஸர்களாகிய பக்தர்கள் நன்கு வழியுடன் உபாசித்து உய்வதற்குண்டான சன்மார்க்கங்களையும் பற்றிய புஸ்தகத்தை, நவஸாலபுரி என்று போற்றப்படும் புதுக்கோட்டையில் உலகமே உய்விக்க எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மாத புவனேஸ்வரி தேவியின் 30-3-97 அன்று நடைபெறவிருக்கும் மஹா கும்பாபிஷேகத்தை முன்னிட்டு அந்த பரதேவதையின் சந்நதியில் **தேவி புவனேஸ்வரி** என்ற புஸ்தகத்தை வெளியிடுகிறார்கள். இது தேவி உபாசகர்களுக்கெல்லாம் மேலும் ஒரு சிறந்த பஞ்சபக்ஷ பரமான்னத்துடன் கூடிய சமாராதனை போன்றதேயாகும் என்று நம்புகிறோம்.

நமது ஆஸ்திகோத்தமனாகிய "நஜன்" நன் மக்களுக்கு கொடுக்கும் உணவானது ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் நமது வைதிக (வேதாந்த) மதத்தின் உண்மையறிவை மேலும் தூண்டிவிட்டு மக்கள் அனைவருடைய உள்ளத்திலும் உயிருக்குயிராக இருந்துவரும் ஆன்ம சக்தியை (ஆன்மாவே ஆதிபராசக்தி என்ற ரகசியத்தை) அறிந்து அன்னை புவனேஸ்வரியை இம்மையில் சிக்கெனப்பற்றச் செய்து உயிருள்ளபோதே ஜீவன் முக்தனுமாக்கி வைத்துவிடும்.

இந்த அருமையானப் பணியை நஜன் தொடர்ந்து நடத்தி இம்மையில் மேலான அழிவற்ற குறைவற்ற செல்வத்திற்கு இருப்பிடமாகி விடவேண்டும் என உலகெல்லாம் உணர்ந்து ஓதற்கரியவனும் எல்லாம் வல்ல சித்தனுமான நமது ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸத்குரு பகவானின் ஸ்மரண பூர்வமாக மேலும் நஜனுக்கு விசேஷ ஆசிகளை அனுப்பிக்கொண்டே இருக்கிறோம். சுபம்.

முகாம் அதிஷ்டானம்,
புதுக்கோட்டை
25-01-1977.

**ஸ்வாமி சாந்தானந்தா**

# காணிக்கை



திருமணநல்லூர் என்கிற ஆச்சாள்புரத்தில், புவனேஸ்வரியையும் அஷ்டதசபுஜ மகாலக்ஷ்மியையும் பெரிய உருவில் படமாக வைத்து ஆராதிப்பவரும் ஒவ்வொரு மாதமும் கிருஷ்ணபக்ஷ நவமியில் சண்டிஹோமமும் விசேஷ தினங்களில் நவசண்டி சத சண்டி முதலியவைகளை செய்து வருபவரும் பிரதிபா பிரசுரம் செய்துவரும் தொண்டில் பக்கபலமாக இருந்து வருபவருமான,

**அம்பிகைதாசர் சாக்தரத்னம்**

## ஸ்ரீ கோவிந்தராஜ பிள்ளை

**அவர்களுக்கு**

**இந்நூலைக் காணிக்கையாக்குகிறோம்.**

**பிரதிபா பிரசுரத்தினர்.**

---

ஸ்ரீ சாது சுவாமிகளின் பிரதம சிஷ்யரும் ஸ்ரீ சிவானந்த சரஸ்வதி ஆசியும் அனுக்கிரஹமும் பெற்ற ஆச்சாள்புரம் ஸ்ரீ வெங்கடேசம் பிள்ளையின் தனயர் இவர், ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகளால் "ஸ்ரீ வித்யா உபாஸகரத்னம்" என்று போற்றப்பட்டவர். தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் சுப்பிரமணிய ஞான சம்பந்த பரமாச்சாரியார் அவர்களிடம் மந்திரோபதேச தீக்ஷை பெற்றவர்.

1936 முதல் புவனேஸ்வரி கோவில் கட்டி முடியும் வரை நைமிசாரண்யம்போல அதிஷ்டானம் திகழ்ந்தது. கோவில் கட்டியபின். புவனேஸ்வரி சாந்நித்யம் பெற்று கம்பீரமாகத் தலைதூக்கி நிற்கின்றது. இது தான் இம்முகவுரை எழுத என் தகுதி. இப்புத்தகம் எழுதியுள்ள நஜன் உலகிற்கு நன்கு அறிமுகம் ஆனவர். இத்தகைய பக்தி நூல்கள் அவர் பேனா முனையி லிருந்து பெருக்கெடுத்து வெளிவருவது அவர் திறமையை அறிந்தவர்களுக்கு வியப்பு தராது. அவர்பிரபல பத்திரிகை ஆசிரியர் குடும்பத்தில் பிறந்தவர். கம்பன் வீட்டுத் தறியும் கவிபாடும் என்பது இவர் விஷயத்தில் உண்மையாகியுள்ளது.

பிரெஞ்சு எழுத்தாளர் "வால்டேர்" நூற்றுக்கு மேல் புத்தகங்கள் எழுதியவர். அவரை ஒரு நடமாடும் சகலகலா நிகண்டு என்பார்கள். அதைப் போலவே "நஜன்" எழுதிய நூல்கள் பலப்பல. அவரை ஒரு நடமாடும் கலைக்களஞ்சியம் எனலாம். பரவலாக இருந்த அவரது அறிவும் ஆற்றலும் இப் போது மகான்களின் ஆசிகளுடன் இந்து மதப் பணியில் ஒருமைப் பட்டிருக்கிறது. இந்நூலைப் படிப்பவர்களுக்கு வியப்புத்தட்டும். சம்ஸ்கிருதம், தமிழ், ஆங்கிலம் நூல்களிலிருந்து எவ்வளவு அரும் பெரும் விஷயங்கள் சேகரிக்கப்பட்டிருக்கின்றன. மதம், விஞ்ஞானம், தத்துவ ஞானம் இவைகளின் ஆழ்ந்த நுண்ணிய கருத்துக்கள் ஓடும் எளிய இனிய நடையில் எவ்வளவு சரளமாக பரமாரப்படுகிறது!

ஸ்ரீ நடராஜனும் அவர் மனைவியும் முறையாக தீக்ஷை பெற்றவர்கள் ஆகவே அவர்கள் இந்தப் பணியில் ஈடுபட பூரணத் தகுதி பெற்றவர்கள். எவரும் தேடாத கண்டுபிடித்திராத அநேக விஷயங்கள் பிரதிபா பிரசுரங்களில் அச்சின் மூலம் கல்லில் பொறித்ததுபோல அழிவில்லாமல் பதிக்கப்படுகின்றன. எதிர்கால சந்ததிகளுக்கு நஜன் தேடி வைக்கும் அரிய பொக்கிஷங்கள் இவை. புவனேஸ்வரி அதிஷ்டானம் தொடர்புள்ள மகான்களைப் பற்றியும் தகவல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இதுவரை எவரும் செய்யாத முயற்சி.

நஜன் புஸ்தகங்கள் தமிழில் மட்டுமே எழுதப்படுகின்றன. இதரமொழி பேசுபவர்களும் இந்த நற்பயனைப் பெறவேண்டும். ஆகவே இதர தெலுங்கு, கன்னடம், ஹிந்தி, மலையாளம் போன்ற மொழிகளில் நஜன் நூல்கள் வெளிவர அம்பிகை புவனேஸ்வரி அனுக்கிரகம் செய்ய வேண்டும்.

ஹைதராபாத்

31-12-76. டி. ஆர். ராஜகோபலய்யர்.

# தேவி புவனேஸ்வரி 1

வாகர்த்தாவிவ ஸ்ம்ப்ருதெள வாகர்த்தப் பிரதிபத்தயே
ஜகத: பிதரௌ வந்தே பார்வதீ பரமேஸ்வரௌ

-காளிதாஸன்

மாதா ச பார்வதீ தேவி பிதா தேவோ மகேஸ்வர:
பாந்தவாஸ் சிவ பக்தாஸ்ச ஸ்வதேஸோ புவநத்ரயம்

-ஆதிசங்கரர்.

(ஜகத: என்றால் உலகம், புவனம் என்றாலும் உலகம். இதற்கு தாய் தந்தையர்களாக உள்ள பார்வதி பரமேஸ்வரர்களை நமஸ்காரம் செய்கிறேன்.)

## புவனங்களின் பெற்றோர்கள்

எதுவுமே ஒன்று தோன்றினால் அதற்கு காரணம் ஒன்று இருக்க வேண்டும். காரணம் இல்லாமல் காரியமில்லை. இந்த மனித ஜன்மத்திற்கு தாய் தந்தையர் உண்டு. அதுபோலவே இந்த உலகத்திற்கும் தாய் தந்தையர் உண்டு.

இந்த உலகம் மற்றும் இதர புவனங்கள் ஏற்பட்டது இயங்குவது எல்லாம் சிவசக்தி சேர்க்கையினாலேயே. எப்படி மணத்தை மலரிலிருந்து பிரிக்க முடியாதோ அப்படி இந்த சிவமும் சக்தியும் செயல்படுகிறது. கிளி என்று சொன்னால் கிளியின் ரூபம் மனதிற்கு வருகிறது. கிளியைப்பார்த்தால் இது கிளி? என்கிறோம். 'கி' 'ளி' என்ற இரண்டே எழுத்துக்கள் இந்த வஸ்துவுக்கும் வார்த்தைக்கும் ஓர் இணைபிரியாத இணைப்பு இருக்கிறது. இது தான் நாம ரூபம். (நாமம் என்றால் பெயர், ரூபம் என்றால் உருவம் எப்படி நாமத்தையும் ரூபத்தையும் தனித்தனியாக பிரிக்க முடியவில்லையோ அப்படி ஈசனும் அம்பிகையும் இருப்பதை அர்த்த நாரீஸ்வர* மூர்த்தம் என்று சொல்லப் படுகிறது.

இதைத்தான் 'வாகர்த்தாவிவ ஸம்ருக்தெள' (வாக்கு அதன் பொருள் இரண்டையும் போல) ஜகத: பிதரௌ வந்தே பார்வதி பரமேஸ்வரௌ (லோகத்திற்கு மாதா பிதாவாக பார்வதி பரமேஸ்வரர்) விளங்குகிறார்கள் என்று காளிதாஸ மகாகவி

* பிரதிபாவின் ஸ்ரீராஜராஜேஸ்வரி புஸ்தகத்தில் அர்த்தநாரீ தத்துவம் பற்றி: "சிவசக்தி ஐக்ய ரூபிணி" என்ற தனி அத்யாயமே எழுதப்பட்டுள்ளது.

குறிப்பிட்டிருக்கிறார். நமக்கு ஓர் உருக்கொடுத்தது நமது அம்மா அப்பா போல உலகங்களுக்கெல்லாம் உருக்கொடுத்து தாய்தந்தையான லோகமாதவையும் பரமேஸ்வரனையும் நமஸ்கரித்து மேல் செல்வோம்.

இந்த தந்தையையும் செயல்பட வைப்பவள் தாய். அந்த சக்தி இல்லை என்றால் உலகமே இயங்காது.

ஒரு சமயம் தேவர்கள் அசுரர்களை எல்லாம் அடக்கிய எக்களிப்பில் இருந்த போது ஆகாசத்திற்கும் பூமிக்குமாய் ஒரே பிரகாசமான ஒளி ஒன்று தோன்றியது தேவர்கள் ஒவ்வொரு வராக அது என்ன என்று பார்க்கப் போனார்கள். அந்த ஒளி ஒரு யக்ஷ உருவமாகி ஒரு துரும்பைக் கிள்ளிப்போட்டு அதை அழிக்கச் சொல்லியது.

வாயுவினால் அதை அசைக்கவே முடியவில்லை. தீயினால் எரிக்கவே முடியவில்லை. கடைசியில் எல்லா தேவர்களும் இதனிடம் தங்கள் தலைவனான தேவேந்திரனையே அனுப்பினர்.

தேவேந்திரன் அகம்பாவத்தை எல்லாம் விட்டு மிகப் பணி வுடன் "நீங்கள் யார் தெரியவில்லையே?" என்று கேட்டபோது ஓர் அழகிய பெண் உருவம் அவன் முன்தோன்றியது.

கேனோபநிஷத் இப்படித் தோன்றியது பரதேவதையான உமாதேவி என்கிறது. ஞானமே உருவானவள் இந்த தேவி. அவள் இந்திரனுக்குப் பதில் சொல்கிறாள்.

"நீ ஜோதியாக பார்த்தது பிரும்ம ஸ்வரூபம். இவ்வளவு பிரபஞ்சத்திற்கும் காரணமாக இருப்பது எல்லாவற்றுக்கும் ஆதாரமாக இருப்பது அந்த பிரும்ம ஸ்வரூபம்தான்."

இந்த அம்பிகைக்கும் ஈஸ்வரனுக்கும் உள்ள சம்பந்தத்தை சரீரி பாவம் என்பர். உடலும் உயிரும் எப்படியோ அப்படி பரமேஸ்வரன் உயிர். அந்த உயிருக்கு உடம்பாயிருப்பது அம்பிகை.

"சரீரம் த்வம் சம்போ" என்கிறார் ஆதிசங்கரர் இந்த சம்பு வின் சரீரமாக இருக்கிற அம்பிகை அகண்ட ஸ்ரூபியாக விளங்குகிறாள். எப்படி பிண்டமாகிய உடல் அவளுடையதோ அதைப்போல அண்டமாகிய உடலும் அவளுடையதே. அவளு க்கு சூரியனும் சந்திரனும் இரு ஸ்தனங்களாக இருக்கின்றன.

குழந்தைகளுக்கு ஸ்தனங்களிலிருந்து பால் கொடுப்பவள் தாய். இந்த புவனங்கள் எல்லாம் அம்பாளுடைய குழந்தைகள். சூரியன் சந்திரன் என்ற இரண்டு ஸ்தனங்களைக் கொண்டு அவற்றின் கிரணங்களினால் இந்த லோகத்தை அம்பிகை ரக்ஷிக்கிறாள்.

அவள் தான் தேவி புவனேஸ்வரி

## புவனநாயகி

யே ஜாநந்தி ஜபந்தி ஸந்தத மபித்யாயந்தி காயந்தி வா
தேஷா மாஸ்ய முபாஸதே ம்ருதுபத ந்யாஸைர்விலாஸைர்
கிராம் கிஞ்ச க்ரீடதி பூர்புவஸ்வரெபித: ஸ்ரீ சந்தன ஸ்யந்தினி
கீர்த்தி: கீர்த்திக ராத்ரி கைரவஸபா ஸௌபாக்ய ஶோபாகரி

- ப்ருத்வீதரர்*

புவனேஸ்வரி தாயே! உங்களை எவர் அறிகிறார்களோ உங்கள் மந்திரத்தை எவர் ஜபிக்கிறார்களோ எவர்கள் தங்கள் ஸ்வரூபத்தை (எப்போதும் தியானம் செய்கிறார்களோ உங்கள் ஸ்தோத்திரத்தை கானம் செய்கிறார்களோ அவர்களுடைய வாக்கிலிருந்து அழகியதும் மிருதுவானதுமான சொற்கள் வரும்படி அம்பிகே நீ செய்கிறாய். மேலும் அமிருத தாரை போன்றதும் சரத்காலத்திய நிலவு போன்றதுமான இவ்வுபாஸகர்களின் கீர்த்தியானது மூன்று உலகிலும் பரவுகின்றது.)

அம்பிகை புவனங்கள் எல்லாம் விரிந்தவள். அவள் பதினான்கு புவனங்களுக்கும் நாயகி; ஆகவே புவனேஸ்வரி எனப்பெயர் பெற்றாள். இவள் தசமகா வித்யைகளில் ஒருவள்.

இந்த உலகம் ஒரு மாயை. இந்த மாய உலகம் ஆதிபரமனால் (மகாவிஷ்ணுவால்) சிருஷ்டிக்கப்பட்டது. அதை உண்டாக்கு வதற்கு சக்தியை கொடுத்தவள் அன்னை புவனேஸ்வரியே. அந்த சக்தி இல்லாவிடில் அப்பரமனுக்கும் இப்பூவுலகை சிருஷ்டிக்க முடியாது என்று வேதங்கள் புராணங்கள் எல்லாமே கூறு கின்றன. எந்த சக்தியை அன்னை கொடுத்தாளோ அந்த அன்னையே இப்பூவுலகை உண்டாக்கியவள் ஆகிறாள். புவனம்

---

* ப்ருத்வீதரர் வடநாட்டில் வசித்தவர். இவர் புவனேஸ்வரி தேவியையே ஆராதித்தவர். புவனேஸ்வரியின் ஸ்தோத்திரங் களையும் பூஜா விதானங்களையும் லோகோபகாரமாக எழுதியுள்ளார். தேவி புவனேஸ்வரியின் அனுக்கிரகத்தைப் பரிபூரணமாகப் பெற்றவர்.

என்றால் உலகம். தண்ணீர் என்ற அர்த்தமும் உண்டு. தண்ணீர் இல்லாமல் உலகம் வாழவே முடியாது. இவ்வுலகத்தைச் சுற்றித் தண்ணீர்தான் சூழ்ந்திருக்கிறது. அத்தண்ணீரைக் கொடுத்து தண்ணீர் உருவமாக இருந்து உலக மக்களை காக்கிறாள்.

தாயாக இருந்து (ஸ்ரீ மாதா) உலகை சிருஷ்டித்து போஷிக்கிறாள்.

உலகை காக்கும் அரசியாக இருந்து (மகாராக்ஞி) பூவுலகை நடத்துகிறாள். ராஜராஜேஸ்வரி ராஜ்யதாயினி என்ற பெயர்கள் அதனால் ஏற்பட்டன.

துஷ்ட நிக்ரஹம் செய்து அருள்பாலிக்கிறாள். முடிவில் எல்லா புவனங்களையும் தன்னிடமே லயப்படுத்திக்கொள்கிறாள்.

புவனேஸ்வரி கால வெள்ளத்தில் புவனங்களைப் பூக்கச் செய்தவள். இப்புவனங்களை நிரப்ப பசு, பட்சி, மிருகம், பாம்பு, மனிதன் என்ற அனைத்து ஜீவராசிகளும் தோன்றிவிட்டன. இவைகளுக்கு உருவங்களும் பெயர்களும் வந்தது இவளால் தான் அவர்களை ஆளும் புவனேஸ்வரியாக இவள் ஆனாள். இவளையே பிரகிருதி (இயற்கை) எனலாம். இயற்கை என்று பலவாக விரிந்திருப்பதைப் பார்ப்பதால்தானே, அதன் மூலமான பிரும்மம் மறைவு பட்டிருக்கிறது. ஆகவே இவளே மாயை.

இவளைப்பற்றி ஆதிசங்கரர் தன் பிரபஞ்ச சாரத்தில்

உத்யத் பாஸ்வத்ஸமா பாம் விஜித நவ ஜபாமிந்து கண்டாவநத்த
த்யோதன் மௌளிம் திரிநேத்ராம் விவித மணிலஸத்
குண்டலாம் பத்மகாம் ச ஹாரக் ரைவேய காஞ்சி குண
மணிவலயாத்யைர் விசித்ராம் பாரட்யாம்
அம்பாம் பாசங்கு சேஷ்டாபய சுர கமலாம்பிகாம் தாம் நமாமி
என்று கூறியுள்ளார்.

(உதயகால சூரியன்போல காந்தி உள்ளவளும், புதிய செம்பரத்தம் பூவை (ஜபாபுஷ்பம்) வெல்லும் நிறமுள்ளவளும், சந்திர கலையால் அலங்கரித்த தலையை உடையவளும், மூன்று கண்களுடன் கூடியவளும், ரத்னங்கள் இழைத்த குண்டலங்கள் உள்ளவளும், தாமரை பூவில் அமர்ந்திருப்பவளும், பாசம் அங்குசம் வரதம் அபயம் முத்திரைகள் கொண்டவளும் உலகத் தாயுமான புவனேஸ்வரி அம்பிகையை நமஸ்கரிக்கின்றேன்.)

ஆதியில் பிறிது ஒன்றில்லாமல் ஆத்மா என்ற பரப்பிரும்மமே எங்கும் நிறைந்திருந்தது. "ஒரு சமயம் இந்த பிரம்மத்திற்கு உலகங்களை சிருஷ்டிக்க வேண்டும் என்கிற எண்ணம் உண்டாயிற்று. இதன் பயனாக உலகங்கள் உலக பாலகர்கள் என்று படிப்படியாக பல வகைகளில் இப்பிரபஞ்சம் உருவாயிற்று" என்கிறது ஐதரேய உபநிஷத்.

இதை ஈஸ்வரன் தன் மாயா சக்தியால் உலகத்தை அதனிலுள்ள ஜீவராசிகளுடன் சிருஷ்டிக்கிறார் என்கிறோம். பரப்பிரும்மத்திற்கு உலக சிருஷ்டியில் இச்சை ஏற்படும்போது அதற்கு ஈஸ்வரன் அல்லது புருஷன் என்று பெயர் இந்த இச்சை படைப்பாக (காரியமாக) உருவடையும்போது அதை சக்தி அல்லது பிரகிருதி என்கிறோம். இந்த சக்திக்கு மாய சக்தி என்று பெயர்.

ஒருவன் தன் சக்தியை சமயத்திற்கு தகுந்தது போல் உபயோகிப்பதை போலவே ஈஸ்வரனும் சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு தன் சக்தியை உபயோகிக்கிறார். அந்தந்த பிரயோகத்திற்கு ஏற்றவாறு சக்தியின் பெயர்களும் துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி, ராஜராஜேஸ்வரி என்றெல்லாம் மாறுபடுகின்றன. சக்திகள் எல்லோருமே மாயா சக்தியின் பரிணாமமேயாயினும் படைப்புக்கு காரணமாக இருக்கும்போது புவனேஸ்வரி என்ற பெயருடன் விளங்குகிறாள்.

## வேதம் விளக்கும் புவனேஸ்வரி

தேவி பாகவதம் (வியாசர் இயற்றியது) ஆரம்பிக்கும்போது "ஸர்வ சைதன்ய ரூபாம் தாம் ஆத்யாம் வித்யாம் ச தீமஹி புத்திம் யாந: பிரசோதயாத்" என்று ஆரம்பிக்கிறது. இங்கு புத்திம்யாம் என்பது எல்லா மனிதன், பிராணி, பட்சி, ஜீவன் இவர்களின் ஹிருதயத்தில் இருந்துக் கொண்டு அவர்களின் புத்தியை காரியங்களில் செலுத்துகின்ற ஆதி வித்யா ரூபிணியான அம்பிகை புவனேஸ்வரியையே குறிக்கிறது.

யாகம் அல்லது யக்ஞம் ஆரம்பிக்கும்போது யாகம் செய்பவர் நடத்தி வைப்பவரைப் பார்த்து "பூபதே புவனபதே" என்று கூறி யாகத்தை நடத்தி வைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறார்.

நடத்தி வைப்பதாக ஏற்றுக் கொள்பவர் "அஹம் பூபதி ரஹம் புவனபதி" என்று சொல்கிறார்.

வேதத்தில் செய்யும்படி விதித்துள்ள காரியங்களில் யாகம் யக்ஞம் மிகச்சிறந்தது. இதை "யக்ஞோஹிச்ரேஷ்டதமம் கர்ம"

என்று கூறுகிறது வேதம். யாகம் நடத்தி வைப்பவர் "புவனபதியாக இருந்து நடத்தி வைக்கிறேன்" என்கிறார். இவர் யாகத்தை நடத்தி வைப்பது போல அம்பிகை புவனபதியாக இருந்து லோகங்களை நடத்தி வைக்கிறாள். 'புவனபதி' என்பது வேத வாக்கியம்.

## காயத்ரி ரூபிணி

காயத்ரி தியானத்தில் பிராணிகளின் புத்தியைக் காரியங்களில் செலுத்துவதுமான தேஜோ ரூபிணியாக காயத்ரியை தியானம் செய்வதாக கூறப்படுகிறது. பிராணிகளின் புத்தியை காரியத்தில் செலுத்துவது புவனேஸ்வரியே.

புவனேஸ்வரியே காயத்ரி ரூபிணியாக சூர்ய மண்டலத்தில் இருந்து அவளே உலகத்திற்கு ஒளியைக் கொடுக்கிறாள் என்கிறது தேவி பாகவதம். அவளை உபாசித்தால் எல்லா தேவதைகளையும் உபாசித்த பலன் கிடைக்கிறது என்று கூறி காயத்ரி அக்ஷரம் இருபத்தி நான்கினாலேயே வியாசர் தேவி பாகவதத்தை முடிக்கிறார்.

தேவி பாகவதத்தில் மூன்றாவது ஸ்கந்தத்தில் இந்த அம்பிகை புவனேஸ்வரி பற்றி மிகச்சிறப்பாக கூறப்பட்டுள்ளது.

பிரும்மாவிடம் சிருஷ்டி சக்தியாகவும், விஷ்ணுவிடம் பரிபாலிக்கும் சக்தியாகவும், ருத்திரனிடம் சம்ஹார சக்தியாகவும் இருக்கிறாள். மாயூரம் ஸ்ரீ ராமனாத தீக்ஷிதர் தன் கட்டுரையொன்றில் பின்வருமாறு கூறுகிறார்.

"வேதங்களை கடைந்து அதன் சாரமாக காயத்திரியை எடுத்ததாக மனு கூறுகிறார்.காயத்ரி 24 எழுத்துக்களுடன் கூடியது. தேவி பாகவதம் ஆரம்ப ஸ்லோகமும் 24 எழுத்துக்கள் கொண்டது. காயத்ரியின் அர்த்தம் சூர்ய மண்டலத்தில் உபாசிக்க தகுந்ததும் ஜீவன்களின் புத்தியைக் காரியங்களில் செலுத்துவதுமான தேஜோ ரூபமான காயத்ரியை தியானம் செய்வதே. அந்த அர்த்தத்தையே இந்த முதல் ஸ்லோகம் விளக்குகிறது. ஆகவே தேவி பாகவதத்திற்கு லக்ஷணம் சொல்லும்போது,

கா்யத்ர்யாச ஸமாரம்ப: யத்ர வ்ருத்ர வதஸ்ததா
ஹயக்ரீவா பிரும்ம வித்யா தத்ஸவ பாகவதம் விது:

என்ற லக்ஷணம் காயத்ரியினால் ஆரம்பிக்கிறபடியால் இந்த பாகவதத்திற்கு பொருந்துகிறதென்று சான்றோர் சொல்லுகின்றனர்".

ஜனங்களிடம் பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ என்பதான சப்த சக்தியாகவும் புவனங்களை விளையாடும் இடமாகக் கொண்டு பிரும்மாதி தேவர்கள் ஆராதிக்கப்படும் பரதேவதை என் வாக்கில் திறமை கொடுத்து அருள வேண்டும் என்று தேவி பாகவதம் ஆரம்பத்தில் வியாசர் பிரார்த்திக்கிறார். புவனேஸ்வரி தேவர்களிடமும் மனிதர்களிடமும் சக்தியாக விளங்குகிறாள் என்பதையே இது குறிப்பிடுகிறது.

இந்த அம்பிகையின் உபாசனையில் குரு ஸ்மரணம் முதலிய தியான முறைகளும், அனுதினம் செய்யவேண்டிய வழிபாட்டு முறைகளும், சாஸ்திரங்களில் விசேஷமாகக் கூறப்பட்டுள்ளன. இதை பற்றிய முழுவிவரங்களும் ருத்ரயாமளம் நூலில் விவரிக்கப்பட்டுள்ளன.

உலகத்தில் உண்டாகும் எல்லாக் கஷ்டங்களையும் அப் போதைக்கப்போது துடைத்து மக்களை ரக்ஷிக்க மாதா புவனேஸ்வரி அதற்குத் தகுந்த ரூபங்களை எடுத்து மக்களுக்கு உண்டாகும் துயரத்தை போக்குவதால் புவனேஸ்வரி தேவி "விஸ்வார்த்தி ஹாரிணி" என்று போற்றப்படுகிறாள்.

## ராத்திரி ஸூக்தத்தின் தேவதை அவளே

சப்தசதி (தேவி மகாத்மியம்)யில் வரும் ராத்திரி ஸூக்தத்தின் தேவதையாக புவனேஸ்வரி விளங்குகிறாள்.

ராத்ரி ஸூக்தஸ்ய குசிக ருஷி: ராத்ரிர் தேவதா| காயத்ரி சந்த: ஸ்ரீ ஜகதாம்பா ப்ரீத்யர்த்தே ஜபே விநியோக: என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த ஸூக்தத்தை பாரயணம் செய்வது ஜகதாம்பிகைக்கு ப்ரீதியைத் தருவதாகும்.

ராத்ரீம் பிரபத்யே ஜனனீம் ஸர்வபூத நிவேசினீம்
பத்ராம் பகவதீம் க்ருஷ்ணாம் விச்வஸ்ய ஜகதோநிசாம்

காலமாக இருக்கும் அம்பிகை பகலில் பளபளப்புடன் விளங்கினாள் இப்போது இரவில் அமைதியில் அடங்குகிறாள். அவள் அடங்குவதாவது அவ்ள் இரவைக் காட்டி உலகை எல்லாம் அமைதியில் அடங்கச்செய்கிறாள்.

ஜீவன்கள் எல்லாம் இப்படி ஒடுங்கியிருக்கும் போது ஜாக்ரத் (விழிப்பு) ஸ்வப்ன (கனவு) ஸூஷூப்தி (விழிப்பு) இம் மூன்று அவஸ்தைகளுக்கும் அப்பாலுள்ள துரீய நிலையிலுள்ள அம்பிகை

சதா விழித்துக்கொண்டு உறங்கும் உலகனைத்தையும் பார்த்துக்கொண்டிருக்கிறாள்.

"அம்பாள் அஷ்டபதி" என்று ஒரு ஸ்துதி மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்களில் அவருக்கு சக்தி கொடுத்து வெற்றி பெற உதவியது அம்பிகையே என்று வருணிக்கிறது.

கருணாரஸ மபஹாய–பலிம் நிஜதாஸம் அமரக்ருதே கமயஸி
பணிவாஸம் புவனேஸ்வரி வாமனதனோ ஜய ஜகதம்ப சிவே ||

(மகாபலியின் அகந்தையை அடக்கி அவளை பாதாளத்தில் தள்ளிய புவனேஸ்வரி சக்திக்கு நமஸ்காரம்.)

அம்பிகையின் ஒரு கையில் பாசக்கயிறு வைத்திருக்கிறாள். தன்னை நாடிவரும் பக்தியுள்ளத்தை இப் பாசக்கயிறு கொண்டு தன்பால் இழுத்து அனுக்கிரஹம் செய்கிறாள். இப்பாசத்தின் அதிதேவதை அச்வாருடா.

அம்பிகை மற்றொரு கையில் கொண்டுள்ளது அங்குசம் சாதரணமாக யானையை அடக்கிச் செல்ல உதவும் ஆயுதம். யானையின் மதத்தை அடக்க இது உதவுவது போல பக்தர்களின் அகந்தையை அடக்க அம்பிகை இதைக் கையில் கொண்டிருக்கிறாள். இதற்கு அதிதேவதை ஸம்பத்கரி.

ஒரு கை வரத முத்திரை பாதத்தைக் காட்டி அமைந்துள்ளது "என் பாதார விந்தமே என்றும் கதி என்று விழுந்துவிடு" என்று குறிக்கிறது. ஒரு கை அபயம் "நான் இருக்க. பயமேன்" என்று அபயம் அளிக்கிறது.

## லலிதையும் புவனேஸ்வரியும்

மஹாயாகம் (ஆவரண பூஜையே) செய்து மஹாபைரவர் எனப்படும் சம்புநாதர் லலிதையை ஆவிர்க்கும்படி செய்ததாக லலிதா உபாக்யானம் கூறுகிறது. இதைத்தான் லலிதா சகஸ்ரநாமம் "மஹாயாகக்கிரமாராத்யா மஹாபைரவ பூஜிதா" என்கிறது. இந்த லலிதா பரமேஸ்வரியே பின்னர் மஹாகல்ப மஹா தாண்டவம் புரிந்து பிரளயத்தை தோற்றுவித்த போது அதை ஏக ஸாக்ஷிணியாக இருந்து அனுபவித்து தன் இச்சையினால் மீண்டும் பிரபஞ்சத்தை தோற்றுவித்தாள். அப்போது லலிதையே புவனேஸ்வரி என்று பெயர் பெற்றாள்.

ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமத்தில் ஒரு நாமாவாக "புவனேஸ்வரி" நாமா காணப்படுகிறது.

புருஷார்த்த ப்ரதா பூர்ணா போகினி புவனேஸ்வரி
ஹ்ரீம்காரி ஹ்ரீமதிஹ்ருத்ய ஹேயோபதேய வர்ஜிதா

என்று, மாயாபீஜம் என்றும் புவனேசீ என்றும் மந்திர சாஸ்திரங்களில் பிரசித்தமான ஸ்ரீ புவனேஸ்வரியைக் குறிக்கும் ஹ்ரீம்காரி என்ற நாமாவும் காணப்படுகின்றது.

சிந்தூராருண விக்ரஹாம் திரிநயனாம் மாணிக்ய மௌளிஸ்புரத்
தாராநாயக சேகராம் ஸ்மிதமுகீம் ஆபீன வக்ஷோருஹாம்
பாணிப்யாம்
அலிபூர்ண ரத்னசஷகம்ரக்தோத்பலம் பிப்ரதீம் சௌம்யாம்
ரத்னகடஸ்த ரக்த சரணாம் த்யாயேத் பராம் அம்பிகாம்

என்று லலிதா ஸகஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்கு தியான ஸ்லோகம் கூறப்பட்டிருக்கிறது. இதை பாஸ்கரராயரும் ஏற்றிருக்கின்றார் என்பதை அவரின் உரை காட்டுகின்றது. இந்த தியான ஸ்லோகம் மூன்று அக்ஷரங்கள் கொண்ட புவனேச்வரி மந்திரத்திற்கு தியானமாய் சாரதாதிலகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதனால் லலிதையையும் புவனேஸ்வரியையும் ஒன்றாகக் கருதியிருப்பது தெரியவருகிறது. ஆகவே லலிதா ஸகஸ்ரநாமத்தால் புவனேஸ்வரியையும் ஸ்ரீ சக்ர பூர்ண மஹாமேருவையும் ஒருங்கே பூஜிப்பது பொருத்தமாய் அமைகிறது. மெய்யன்பர்கள் க்ஷேமத்தை பெற்றுய்ய தேவி ஸ்ரீ புவனேஸ்வரியின் பிரார்த்தனை மந்திரத்தை அனுதினமும் 108 தடவை ஜபித்து நாம் விரும்பிய இஷ்டகாம்யார்த்தங்களைப் பெற்றுய்ய வேண்டுமாக ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் அனுக்கிரஹிக்கிறார்கள்.

ஸர்வ சைதன்ய ரூபாம் தாம் ஆத்யாம் சக்திம் ச தீமஹி
ஹ்ரீங்கார ரூபிணீம் தேவீம் தியோ யோ ந: ப்ரசோதயாத்

இதன் கருத்து: சகல சராசரப் பிரபஞ்சமும் தோன்ற பிரகிருதி சக்தியாய் ஸர்வஜீவராசிகளிலும் ஆத்ம ஸ்வரூபிணியாய் வியாபித்து, ஸ்வநாதப் ப்ரபஞ்ச பீஜமான ஹ்ரீங்கார ஸ்வரூபிணியாய் உலகில் அறிவெனும் ஞானத்தின் அதி தெய்வமாய் விளங்கும் ஸ்ரீ ஜகன்மாதா புவனேச்வரி நமது நல்வினைக்குக் காரணமான நற்புத்தியை அளித்து அருள்பாலிக்கட்டும்.

## புவனேஸ்வரியே திரிபுராதேவி

“திரிபுரா ரகஸ்யம்” என்ற அருமையான நூலில் திருபுரா தேவி யார் என்பதை லக்ஷ்மிதேவியே விளக்குகிறாள்.

பண்டாசுரன் என்பவன் முன் ஜன்மத்தில் லக்ஷ்மி பக்தன். ஒரு பெண்ணை பலாத்காரம் செய்ய நேர்ந்ததால் லக்ஷ்மிதேவி யின் சாபத்திற்கு ஆளானான். அவன் தன் தவறை உணர்ந்து சாபவிமோசனம் கேட்டபோது லக்ஷ்மி தேவி கூறினாள்.

"நீ அசுரனாகப் பிறந்தாலும் அநேக பிரும்மாண்டங்களை ஆண்டு அனுபவித்து திரிபுராதேவியால் மரணமடைந்து சாயுஜ்யப் பதவி அடைவாயாக" என்கிறாள். அப்போது அவன் "யார் அந்த திரி புராதேவி?" என்று கேட்கிறான். லக்ஷ்மி பதில் சொல்கிறாள்.

"அத்தேவி எல்லாவற்றிற்கும் மேம்பட்டவள் சித்ஸ்வரூபிணி வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத பெருமை படைத்தவள். பிரும்மா விஷ்ணு, ருத்ரன் என்ற மும்மூர்த்திகளும் அவள் ஆணையை நிறைவேற்றி வைக்கின்றனர். அவள் தான் சகல அண்ட பிண்ட சராசரங்களையும் இயக்கிக் கொண்டிருப்பவள். அவள் இல்லா விட்டால் இப்பிரபஞ்சமே இல்லை. காளி சரஸ்வதி நான் எல்லோருமே அந்த திரிபுராதேவியின் அம்சமேயொழியே வேறு இல்லை. இந்த புவனங்களை ரக்ஷிப்பதற்காக ஒவ்வொரு சமயங்களில் ஒவ்வொரு உருவத்தை எடுத்துக் கொள்கிறாள்."

திருபுரை என்பதற்கு பலவாறு பொருள் கொள்வர் மும்மூர்த்திகளுக்கு மூத்தவள் (புரை-மூத்தவள்).

திரிபுரார்ணவம் என்ற நூல் "பிங்கலை, இடைகலை, சுழு முனை என்ற மூன்று நாடிகளிலும் இருப்பவள் என்றும், மனம், புத்தி, சித்தம் மூன்றிலும் உறைபவள் என்றும், அதனால் திரிபுரை என்ற பெயர் பெற்றாள் என்றும் கூறுகிறது. முத்தேவர், மும் முறை, முத்தீ, முச்சக்தி, மூன்று ஸ்வரம், மூவுலகு முதலிய மூவகை பிரிவுகளுக்கெல்லாம் உரியவளாதலின் இப்பெயர் வந்ததென்று கௌடபாத சூத்திர உரை கூறுகிறது.

சந்திர கண்டம், சூரிய கண்டம், அக்னி கண்டம் என்னும் முப்பிரிவையுடைய சக்ரத்திற்கு தலைவி என்று ஒரு பொருள். இதை அபிராமிபட்டர்,

பொருந்திய முப்புரை செப்புரை செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குன் மனோன்மணி வார்சடையோன்
அருந்திய நஞ்சமுதாக்கிய அம்பிகை யம்புயமேல்
திருந்திய சுந்தரி பாத மென் சென்னியதே

என்று பாடுகிறார்.

இதில் மனோன்மணி என்பது அம்பிகையின் திரு நாமங்களில் ஒன்று. மனதை ஞான நிலைக்கு எழுப்புபவள் என்பது பொருள். புருவ மத்திக்கு மேலே பிரம்மரந்திரத்திற்கு கீழ் உள்ள பிந்து முதலிய எண்வகை நிலைகளில் இறுதி நிலை உன்மனி அல்லது மனோன் மணியாம். இங்கு உறைவதால் தேவிக்கு இப்பெயர் வந்தது. பற்றற்ற மனம் இயங்குதல் அற்று நிற்கும் நிலை உன்மனியாதலின் அந்நிலையில் அருள்புரிதலால் அம்பிகைக்கு இப்பெயர் ஏற்பட்டது.

## ஐந்து நம:

சப்தசதியில் வரும் "நமோ தேவ்யை" என்று ஆரம்பமாகும் தேவர்கள் செய்த ஸ்தோத்திரத்தில் ஒவ்வொன்றிலும் ஐந்து நம: வருகிறது. நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

ஸ்ரீ பராசக்தி பஞ்சபூதங்களிலும் உறைபவள். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதனம், அனுக்கிரஹம் என்ற ஐம்பெரும் தொழில்களைச் செய்பவள். ஆகவே அவளுக்கு ஐந்து தடவை நமஸ்காரம் சொல்லப்பட்டிருக்கிறது. இத்தகவலை திருவெண் காடு ஸ்ரீ முத்துசாமி சாஸ்திரிகள் ஒரு கட்டுரையில் குறிப் பிட்டிருக்கிறார்.

தைத்திரிய உபநிஷத்தில் ஐந்து கோசங்களிலும் வேறு பட்டதாயும் புச்சப்பிரும்மம் என்றதுமான பரமாத்மா ஸ்வரூபம் புவனேஸ்வரியே என்று கூறப்பட்டிருக்கிறது.

இப்படி அகில அண்டங்களையும் சராசரகளையும் ஈன்று ஊட்டிக் காத்துவரும் புவனேஸ்வரியை முக்கண்ணி, பராபரை, விமலை, இறைவி, பைரவி, அமலை என்றெல்லாம் மறைகள் புகழ்கின்றன.

"கொய்யாது குவியாது குமையாது மணம் வீசும்
கோவாத தெய்வ மலர்
கோவாத முத்தம், குறையாத மதியம்
கோடாத மணி விளக்கு"

என்று அவளைப் புகழ்கிறார் வள்ளலார் ராமலிங்க சுவாமிகள்.

புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் இப் புவனேஸ்வரிக்கும் மேருவுக்கும் ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமத்தை கொண்டு அர்ச்சனை அழகாக நடைபெறுகிறது.

# புவனங்களின் ஈஸ்வரி 2

தேவோ மூர்தாஸி ப்ருத்வியா
நாபி விஷ்டும்பநி திஸாம்
ஆதி பத்நீ புவனானாம் - தைத்ரீய ச்ருதி

(விண்ணுலகம் உன்னுடைய முடியாக திகழ்கின்றது. மண்ணலகு உன் நாபியாக விளங்குகிறது. எனவே திசைகள் அனைத்தையும் நீயே தாங்குகிறாய். உலகங்கள் அனைத்தும் உனது ஆணைவழியாக இயங்குகின்றன. இதனால் அன்னை புவனேஸ்வரியே இவ்வுலகங்கள் அனைத்திற்கும் ஆதாரமாகத் திகழ்கிறாள் என்பது வேதம் கண்ட முடிவாகும்.)

ஆகாசம் சக்திமயமானது. ஆனால் தன் சக்தியை வெளிக் காட்ட முடியாமல் இருந்தது. காற்றும் அதே மாதிரிதான். இந்த காற்றை ஒரு மோட்டார் டயருக்குள் அடக்கினால் எவ்வளவோ டன் கனமுள்ள சாமன்களையும் தூக்குகிறது. ஆகவே சக்தி ஒரு எல்லைக்குள் அடைப்பட்டால்தான் நன்கு விளங்கும். சக்தியான ஆகாசம் ஒரு எல்லைக்குட்படாமல் இருந்ததால் அதன் மகிமை அறிய முடியவில்லை அதுவே பரப்பிரும்ம ஸ்வரூபம். இந்த எல்லையில்லா ஆகாசத்தில் எல்லைக்குட்பட்ட உலகங்கள் பல உண்டாயின.

கூட்டில் அடைபட்ட உலகங்களுக்கு தனித்தனியே சக்தி ஏற்பட்டமையால் ஒன்று மற்றொன்றை இழுக்க பல பல சிறிய உலகங்கள் பெரியதுடன் சேர்கப்பட்டன. இந்த உலகங்கள் ஒன்றுக்கொன்று இழுப்பு ஏற்பட்டு விளங்கின. இதையே நம் முன்னோர்கள் விஷ்ணுசக்தி என்றார்கள்.

இந்த விஷ்ணு சக்தி பலகோடி ஆண்டுகள் கட்டுபாடின்றி இருந்த பின்பு சில உலகங்கள் தோன்றி நமக்குள்ளேயே ஒரு எல்லையை ஏற்படுத்திக் கொண்டு சஞ்சரிக்க ஆரம்பித்தன. இப்படி ஏற்பட்ட உலகக்கூட்டங்களில் ஒன்று தான் சூர்ய மண்டலம்* இதை சிவசக்தி என்றனர். இதில் தான் புத்தி சக்தியும் பகுத்தறிவு சக்தியும் உதயமாகிறது.

புத்தி சக்தி உதயமானதால் தான் பிரகாசம் அல்லது ஒளி காணப்பட்ட்து. ஆகாசத்தில் ஓம் என்ற ஒலியுடன் ஒரு சப்தம் ஏற்பட்டது என்றும் அதனுள்ளே பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம் உண்டாக்கப்பட்டனவென்றும் அதன் பின்பே இதர உலகங்கள் ஏற்பட்டனவென்றும் கூறப்படுகிறது.

* பூமி இந்த சூரிய மண்டலத்தை சேர்ந்ததே.

ஆகாசம் ஒன்றாக இருந்தது, இரண்டாயிற்று பின்பு மூன்றா கியது. ஒன்று என்பது பிரும்மம், இரண்டு என்பது விஷ்ணு, மூன்று என்பதை சிவம் என்று சொல்கிறார்கள்.

லலிதா சகஸ்ரநாமத்தில் "உன் மேஷ நிமிஷோத் பன்ன விபன்ன புவனாவளி" என்று அம்பிகைக்கு ஒரு நாமா உள்ளது. அம்பிகை கண்ணை திறந்தால் எல்லாலோகங்களும் சிருஷ்டிக்கப் படுகின்றன. கண்ணை மூடினால் அவ்வளவும் அழிந்து விடுகின்றன.

கருணை காரணமாக அவள் கண்களை மூடுவதில்லை. சௌந்தர்யலஹரியில் இதையே ஆதிசங்கரர் "நிமோஷான் மேஷாப்யாம்" என்ற சுலோகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

அம்பிகை இயற்றிய சிருஷ்டி பற்றி ஹயக்ரீவர் அகஸ்தி யருக்கு கூறிய விவரமானது :

சிதக்னிகுண்டத்திலிருந்து ஆவிர்பவித்த அம்பிகை பின் கண்டவாறு சகல ஜகத்தையும் சிருஷ்டித்தாள். தன் அளக பாரத்திலிருந்து இருட்டு என்கிற அஞ்ஞானத்தையும், மூன்று கண்களிலிருந்து சூரிய சந்திர அக்னிகளையும் நெற்றிமுத்துக் களிலிருந்து நக்ஷத்திரக் கணங்களையும் பாளீவதம் முத்துக்களி லிருந்து நவக்கிரங்களையும் சிருஷ்டித்தாள்.

ஆக்ஞா சக்ரத்திலிருந்து தண்வ நீதியும், புருவத்திலிருந்து பிரபஞ்ச சக்ரமும் சிருஷ்டிக்கப்பட்டன. மூச்சுக்காற்றே வேதங் களாகத் திகழ்ந்தன. இனிய மொழிகளே காவ்ய நாடக அலங்கார சாஸ்திரங்களாகும்.

நாக்கிலிருந்து சரஸ்வதியும், கழுத்திலிருந்து வேத ஷடங்கங் களும், கழுத்தின் மேல் ரேகையிலிருந்து மீமாம்ஸை நியாயம் புராணாதி சாஸ்திரங்களும், மத்ய ரேகையிலிருந்து ஆயுர் வேதமும் தனுர் வேதமும், கீழ் ரேகையிலிருந்து சங்கீத சில்ப சாஸ்திரங்களும் தோன்றின. 64 கலைகளும் கழுத்தினின்று தோன்றின. தோள்களிலிருந்து சந்தஸ் சாஸ்திரமும், ஹஸ்த மூலங்களிலிருந்து மதன சாஸ்திரமும் தோன்றின. அஷ்டகுல பர்வதங்கள் ஸ்தனங்களிலிருந்து பார்ச்வங்களிலிருந்து எல்லா திசைகளும் அந்தரிக்ஷமும் சிருஷ்டிக்கப்பட்டன.

மனத்தினால் ஆனந்த சக்தியும், கைகளால் அஷ்டபாசங்களும் ரோமாவளியினால் சேஷன் முதலிய சர்ப்பராஜக்களும், கை விரல்களிலிருந்து மன்மதனது பஞ்ச பாணங்களும், கை

விரல்களின் நகநுனியிலிருந்து மத்ஸ்ய கூர்மாதி அவதாரங்களும், கைகளின் சிவப்பு நிறத்திலிருந்து காலை மாலை சந்திகளும, முகத்திலிருந்து இந்திராக்னிகளும், பிராணனிலிருந்து வாயுவும், நாபியிலிருந்து ஆகாசமும், சிரஸ்ஸினிலிருந்து ஸ்வர்க்கமும் தோன்றின. பாதங்களிலிருந்து பூமியும், பார்வையிலிருந்து தர்மாதர்மங்களும், புன்சிரிப்பிலிருந்து பரமானந்தமும் சிருஷ்டிக்கப்பட்டன.

பின் புருஷன், பிரகிருதி, மஹத்தத்துவம், அகங்காரம், தன்மாத்திரைகள், பஞ்ச பூதங்க்ள் முறையே நாபிகமலம் நாபி மூலம், பிரஷ்டபாகம், துடைமூலம், முழங்கால் கணுக்கால்களிலிருந்து தோன்றின.

குதிக்காலிருந்து சப்த சமுத்திரங்களும், புறங்காலிருந்து சக்ரவாளகிரியும், உள்ளங்காலிருந்து ரஸாதல லோகமும் சிருஷ்டிக்கப்பட்டன. இப்படியே பசுக்கள் முதலியவைகளும் பிரஹ்ம க்ஷத்திரியாதி நான்கு வர்ணங்களும் விருக்ஷ ஜாதிகளும் சிருஷ்டிக்கப்பட்டன. பின்னர் கீர்த்தி, புஷ்டி, காந்தி முதலியன உண்டாக்கப்பட்டன.

மற்றும் உள்ளங்கால் முதல் சிரஸ் வரையிலுள்ள பதினான்கு ஸ்தானங்களிலிருந்து பதினான்கு லோகங்கள் சிருஷ்டிக்கப்பட்டன.

## 14 புவனங்கள்

இந்த பதினான்கு புவனங்கள் (லோகங்கள்) என்ன என்பது தெரிந்துக் கொள்ளவேண்டாமா?

பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம் ஜனலோகம், தபலோகம், சத்யலோகம் (இந்த ஏழும் மேல் லோகங்கள்).

அதலம், விதலம், சுதலம், தலாதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம். (இவ்வேழும் கீழ் லோகங்கள்).

1. பூலோகம்:- சூரிய சந்திர கிரணங்களின் பிரகாசம் பெற்று சமுத்திரம் நதிகள் மலைகள் இவைகளுடன் கூடியது. காலாலே நடந்து போகத்தக்கதாய் பூமி சம்மந்தமான வஸ்து எதுவுண்டோ அதெல்லாம் பூலோகம்.

2. புவர்லோகம்:- பூமிக்கும் சூர்ய மண்டலத்திற்கும் நடுவில் உள்ளது. சித்தாதி முனிவர்கள் வாசம் செய்யும் இடம். இது லோகங்களில் இரண்டாவது.

3. ஸூவர்லோகம்:- சூரிய மண்டலம், சந்திரமண்டலம், துருவமண்டலம், சப்தரிஷி மண்டலம் முதலியவை கொண்டது. இம்மூன்றும் கல்பம் தோறும் உண்டாக்கப்படுவதினால் கிருதகம் எனப்படும். இம் மூன்று லோகங்களும் யாக பலானு பவத்திற்கு ஸ்தானமாயிருக்கின்றன.

4. மஹர்லோகம்:- துருவமண்டலத்திற்கு மேலே கோடி யோஜனை தூரத்தில் ஒரு கல்ப காலம் பிழைத்திருக்கிற பிருகு முதலிய ரிஷிகள் வாசம் செய்கின்ற இடம்.

5. ஜனலோகம்:- மஹர் லோகத்திற்கு மேலே இரண்டு கோடி யோஜனை தூரத்தில் பிரும்ம புத்திரர்களான சனகாதிகள் வாசம் செய்யும் இடம்.

6. தபோலோகம்:- ஜனலோகத்திற்கு எட்டுகோடி யோஜனை தூரத்திலுள்ள இங்கு வைராஜர் முதலிய தேவதைகள் உள்ளனர்.

7. சத்தியலோகம்:- தபோலோகத்திற்கு 12 கோடி யோஜனை தூரத்தில் உள்ளது இது. இது தான் மறுஜன்மம் எடுக்காதவர்கள் வாசம் செய்யும் இடம்.

ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் இம்மூன்றும் கல்பம் தோறும் உண்டாக்கப்பட்டமையால் அகிருதகம் எனப்படும். இந்த கிருதகம், அகிருதகம் என்ற இரண்டின் நடுவில் மஹர்லோகம் இருக்கிறது. இது கல்பத்தின் முடிவில் ஜனசூனிய மாகிறதேயொழிய சொரூபம் நசிப்பதில்லை. ஆகையால் கிருதா கிருதகம் எனப்படும். இவ்வேழும் மேல் லோகங்கள்.

அதல விதல முதலிய ஏழு லோகங்களைப் பற்றி தேவி பாகவதம் எட்டாம் ஸ்கந்தத்தில் கூறப்பட்டுள்ளது.

1. அதலம்:- மயன் புத்திரனான பலன் சர்வப் பிரயோஜனத் தையும் கொடுக்கவல்ல 96 மாயைகளை சிருஷ்டித்தான். அவனுடன் பும்சலி, ஸ்வைரணி, காமினீ இருக்கின்றனர். இவர்கள் வசப்பட்டால் நாம்தான் ஈஸ்வரன், நாம்தான் சித்தன், நமக்குள்ள பலம் யாருக்கும் இருக்காதென்று தம்மைத்தாமே புகழ்ந்துக்கொள்வர்.

2. விதலம்:- இங்கு ஆடகேஸ்வரர் தன் பிரதம கணங்களால் சூழப்பட்டு தேவர்களால் பூஜிக்கப்பட்டவராய் விளங்குகிறார். பார்வதி பரமேஸ்வரருடைய வீரியமே ஆடகம் என்கிற சிறந்த பொன் கிடைக்கிறதாம்.

3. சுதலம்:- மகாபலி இங்கு மிகப் புகழுடன் விஷ்ணு பக்தனாக விளங்குகிறார்.

4. தலாதலம்:- மயன் என்ற அசுர சிற்பி சிவபெருமானின் அனுக்கிரகம் பெற்று இங்கு ஆட்சி செய்கிறான். அசுரர்களால் பூஜிக்கப்படுவன்.

5. ரசாதலம்:- இங்கு காத்திரவேயர்கள் என்ற அநேகம் சிரஸ்களையுடைய சர்ப்பங்கள் வாழுகின்றன. இவைகளில் குகன், தக்ஷன், சுவேணன், சரியன் என்ற நான்கும் பிரதான ஜாதிகள். கருடனிடமுள்ள பயத்தால் இந்த லோகத்தில் தஞ்சம் புகுந்துள்ளன.

6. மகாதலம்:- நிவாத கவசர்கள், காலகேயர்கள் என்கிற பிரசித்திபெற்ற ராக்ஷஸர்கள் வசிக்கின்றனர்.

7. பாதாளம்:- வாசுகி, சங்கரன், குளிகன், சுவேதன், தனஞ்சயன், மகாசங்கன், சங்கசூடன், கம்பவாஸ் வரதன், தேவோபதத்தன் முதலான நாகலோகாதிபதிகள் முடிகளில் ரத்னங்களுடன் விளங்குகின்றனர். அவர்களுடைய ரத்னகாந்திகளால் இங்குள்ள இருள் நீங்குகிறது. இவ்வுலகின் மூலஸ்தானத்தில் தாமசீ என்னும் பகவானுடைய கலை, அனந்தை என்னும் பெயருள்ளதாய் சகல தேவர்களாலும் பூஜிக்கப்படுகிறது. "நான்" என்னும் அகங்காரத்திற்கு அந்த தாமசக்கலையையே லட்சணமாக கூறப்படுகிறது.

இந்த லோகங்கள் எல்லாம் ஆயிரம் தலையுள்ள ஆதிசேஷனால் தாங்கப்பட்டிருக்கின்றன.

நரகம் என்பதும் தனி லோகம். இதில்தான் எத்தனை பிரிவுகள்: ரௌரவம், சூகரம், ரோதம், தாலம், விசஸநம், மகாச்சுவாலம், தப்தகும்பம், லவணம், விலோகிதம், ருதிராம்பம், வைதரணி, இருமிசம், கிருமிபோசனம், அசிபத்திரவனம், கிருஷ்ணம், லாலாபட்சம், பூயவகம், அக்னிச்சுவாசம், அதச்சிரம், சந்தமிசம், கிருஷ்ண சூத்திரம், தமசு, அவீசி, நவபோசனம், அப்பிரதிஷ்டம் இவைகள் எல்லாம் எமதர்மன் ஆதிக்கத்திலுள்ளன.

இந்த லோகங்கள் எல்லாம் அம்பிகையின் உடலில் உள்ளன. அதன் விவரம் :

உள்ளங்கால்—அதலம்
கணுக்கால்—விதலம்
முழங்கால்—சுதலம்
பிரஷ்டம்—தலாதலம்
தொடை—மகாதலம்
குறி—ரசாதலம்
இடை—பாதாளம்

நாபி—பூலோகம்
வயிறு—புவர்லோகம்
இதயம்—சுவர்க்கலோகம்
தோள்—மகர்லோகம்
முகம்—ஜனலோகம்
நெற்றி—தபோலோகம்
சிரஸ்—சத்தியலோகம்

## நாம் வசிக்கும் உலகம்

நாம் வசிக்கும் இந்த லோகத்தைப்பற்றி மட்டும் சற்று விரிவாகத் தெரிந்துக்கொள்வோம்.

இன்று ஆராய்ச்சியாளர்கள் இந்த உலகம் ஏற்பட்டு எவ்வளவு காலமாயிற்று? அந்த உலகத்தின் உருவம் என்ன? என்றெல்லாம் ஆராய்ந்து பல உண்மைகளைக் கண்டறிகின்றனர். ஆனால் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே பூமி எப்படி ஏற்பட்டது? சிருஷ்டி நடைபெற்றது எப்படி ? அதே மாதிரி பிரளயம் (ஒடுக்கம்) எப்படி ஏற்படுகிறது.? முதலிய சகல விவரங்களும் நமது வேதங் களில் உள்ளன. இன்று ஜியாகரபி (Geography) என்ற பூகோள நூல் பற்றி படிக்கிறோம். அன்றிருந்த நமது மூதாதையர்களுக்கு இந்த பூகோள அறிவு எவ்வளவு இருந்தது என்பதை மகா சங்கல்பத்தில் கூறப்படும் பதங்களின் அர்த்தங்களைப் புரிந்துக்கொண்டால் தெரிந்துக்கொள்ளலாம்.

பரமசிவம் நினைத்த மாத்திரத்தில் அதிலிருந்து பராசக்தியும் குடிலை என்ற மகாசக்தியும் தோன்றுகின்றன. பிறகு பிற தத்துவங்கள் பிறக்கின்றன. பஞ்சக் கிருத்தியங்களுக்குள்ள பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன், சதாசிவ்ன் தோன்றுகிறார்கள்.

பிரும்மாவிடமிருந்து மரீசி, அங்கிரஸன், புலஸ்தியன், புலகன், நான்மறையோர், கிருது, அத்திரி, சனகாதி, எழுவரும் திளைத் தார். உரியதக்கனும் வலப்பதப் பெருவிரலில் உதித்தான். பிருகு மார்பினும் அறத்துஇறை முகத்தினும் பிறந்தார்.

பிரும்ம தேவன் நினைத்த மாத்திரத்தில் மரீசி அங்கிரஸ் முதலிய சப்த ரிஷிகளும் முனிபுங்கவர் மார்பினின்றும் அறக் கடவுள் முகத்தினின்றும் உதிக்கிறார்கள். இவர்கள் வம்சம் வளர்கிறது. உயிர்தொகுதிகள் உத்வேகத்துடன் பெருகுகின்றன.

மரீசிக்கு காசியபர் பிறக்கிறார். தக்கன் 60 பெண்களைப் பெற்று அவர்களில் 13 பேர்களை காசியபருக்கு மணம் செய்விக்கிறான். இப்பெண்களில் மூத்தவளான அதிதி வயிற்றில் தேவர்கள் பிறக்கிறார்கள். திதிக்கு ராக்ஷஸர்கள் பிறக்கிறார்கள். தேவேந்திரனுக்கு ஆயுதமாகும் பொருட்டு தன் முதுகெலும்பைக் கொடுத்து தேகத்தை விட்டவர் ததீசி முனிவர். இவர் சம்பரன் உட்பட 10 பேர்களைப் பெறுகிறார். இவர்களில் ஒருவளான சிங்கிகை, ராகு, கேது முதலியவர்களைப் பெறுகிறார். இவளுக்கு இளையவள் காலை காலகேயர்கள் அறுவரையும் விந்தை, கருடன், அருணன், ஆகியவர்களையும் கத்துரு என்பவள் பாம்பு கள் அனைத்தையும் தோன்றச் செய்தனர்.

அரிஷ்டை என்பவள் ரம்பை ஊர்வசி பெண்களையும், இளை பதினாறு வகையான கந்தர்வக் கூட்டத்தையும், அத்திரி சூரிய சந்திரரையும் புலஸ்தியர் கின்னரர், கிம்புருடர் மிருகங்களையும் சனபதி அஷ்டவசுக்களையும், சூரியன் அசுவினி தேவர்களையும் தோற்றுவித்த பிறகு ஸ்தாவர ஜங்கமங்கள் எல்லாம் உண்டாயின. இதன் பின்தான் மனிதன் உண்டானான்.

நம் முன்னோர்கள் பிரபஞ்ச சிருஷ்டி பற்றி வேண்டிய அளவு சிந்தனை செய்திருக்கிறார்கள்.

அவர்களுடையக் கருத்துப்படி முதன் முதலில் ஆகாசம் தோன்றியது. அதில் வாயு தோன்றியது. பிறகு வாயுவுடன் அக்னி சேர்ந்தது. இவற்றோடு ஜலம் சேர்ந்தது. கடைசியில் பிருத்வி என்ற மண் சேர்ந்தது. இந்த ஐந்தின் சேர்க்கையும் பிரபஞ்சமாக உருவெடுத்தது. பிரபஞ்சத்தின் பிறப்புக்கு இந்த ஐம்பூதங்களே காரணம் என்று நம் ஸ்மிருதிகளும் வேதங்களும் வருணிக்கின்றன.

இனி விஞ்ஞான ரீதியில் பார்ப்போம். ஏதோ ஒரு காலத்தில் இந்த ஆகாசவெளி சூன்யமாக இருந்தது. நாளாக ஆக மிக மிக லேசான வாயுவால் இது நிறைந்து விட்டது. இந்த வாயு அங்கங்கே ஒன்று சேர்ந்து பல வாயுத்திவலைகளாக உருண்டு திரண்டது. இப்படி திரண்டது எல்லாம் சக்தி வடிவமானப் பொருளே. சக்தி திரண்டால் பொருள்; பொருள் சிதைந்தால் சக்தி. இப்போது விஞ்ஞான மூலமாக கண்டுபிடித்த இதை அன்றே வேதத்தில் குறிப்பிட்டுள்ளனர்.

இந்த பூமி உருண்டையானது என்பதை மேனாட்டினர்தான் கண்டுபிடித்தார்கள் என்ற தப்பெண்ணம் இருந்து வருகிறது.

பூகோள சாஸ்திரம் என்ற பெயரிலேயே பூமி கோளமாக இருக்கிறது என்பது குறிப்பிடப்பட்டுள்ளதே. கோளம் என்றால் அண்டம் அதாவது முட்டை. ஆகவே அண்டங்கள் முட்டை வடிவமுள்ளது என்பதை நம் முன்னோர்கள் எவ்வளவோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அறிந்திருந்தனர்.

இவ்வுலகை பந்து மாதிரி வைத்துக் கொண்டால் அதன் உச்சிதான் மேரு. அந்த உச்சிக்கு எந்த பக்கமும் தெற்குதான். "ஸர்வேஷாமபி வர்ஷாணாம் மேரு ருத்தரத: ஸ்திதி:" என்று இதைத்தான் சொல்கிறது. இந்த மேருவை சூரியன் சுற்றுகிறான் எப்படி? நமக்கு சூரியன் ஆகாயத்தில் தோன்றுகிறான். நாம் மேரு மீது இருந்தால் பக்கத்தில் தான் தோன்றுவான். அங்கே பகல் ஆறு மாதம் இரவு ஆறு மாதம் என்கிறார்கள். உத்தராயணத்தில் வடக்கே சூரியன் இருப்பதால் அக்காலத்தில் மேருவில் வெளிச்சம் உண்டு. தக்ஷிணாயனத்தில் இரவுதான். இதைத்தான் மேரு சிகரத்திலுள்ள தேவர்களுக்கு ஒரு வருஷம் ஒரு நாள் என்று சொல்லப்படுகிறது. இப்படியே தெற்கேயுள்ள மேருவின் நுனி மேருவின் அடியாகும். வடக்கேயுள்ளதற்கு ஸுமேரு என்றும், தெற்கேயுள்ளதற்கு மேரு என்றும் பெயர்.

கீழே நரகம் இருக்கிறது. சுமேரு முதல் மேரு வரை ஏழு த்வீபங்களும், ஏழு சமுத்திரங்களும் உள்ளன. இப்போது இவைகளைக் காணோம். உருமாறிவிட்டன. மேருவின் உச்சிக்கு நேர் வடக்கே துருவ நக்ஷத்திரம் இருப்பதாக சாஸ்திரங்கள் கூறுகின்றன. இப்போது இடம் மாறிவிட்டது. ஒரு காலத்தில் நேராக இருந்திருக்கவேண்டும். யுகத்தினுடைய ஆதியில் எல்லா கிரகங்களும் ஒரே வரிசையில் இருந்தனவாம். மேருவுக்கு அப்புறம் ஒன்றுமில்லை என்பது நமது சாஸ்திர சித்தாந்தம்.

பூமி அந்தரத்தில் சுற்றுகிறதே! இது எப்படி? சமுத்திரம் பொங்கி நிலப்பகுதியில் பாய்ந்துவிடாமல் அளவோடு நிற்கிறதே! அது எப்படி? இவை எல்லாம் சத்தியத்திற்கு கட்டுப்பட்டு நடக்கிறது என்கிறது நமது சாஸ்திரம். நாள்தோறும் சூரியன் தவறாமல் உதிப்பதும் அஸ்தமிப்பதும் இந்த சத்தியத்திற்கு உட்பட்டுதான். வசந்தம் முதலான ருதுக்களும் காலம் தவறாமல் மாறிவருகிறது.

பீஷாஸ்மாத் வாத : பவதே ! பீஷோ தேதி ஸூர்ய :
மாதக்நிஸ் சேந்தரஸ்ய! ம்ருத்யுர் தாவதி பஞ்சம இதி !!

--தைத்ரீய உபநிஷத்

(கடவுளுக்குப் பயந்தே காற்று வீசுகிறது. சூரியன் உதிக்கிறான்) இந்த வாக்கியம் சத்தியமாகிய கடவுளின் பெருமையைப் போற்றுகிறது. இந்த சத்ய பிரதிக்ஞையுடன் உள்ள கோலங்கள். பஞ்சபூதங்கள் இவைகளின் நடவடிக்கைகளைக் குறிப்பிட "ரிதம்" என்ற சொல் வழங்குகிறது. ரிதம் என்பது உலக அமைப்பிலே யுள்ள உண்மையைக் குறிக்கிறது. (ருதகும் சத்யம் பரப்பிரும்மம் என்பதைக் கவனிக்கவும்.)

பூமி முதலான கோளங்களும், வாயு முதலான பூதங்களும் எப்படி சத்தியத்தை அவலம்பித்து நடத்துகின்றனவோ அம் மாதிரியே ஜீவராசிகளும் சத்தியத்தைக் கடைப்பிடித்து தங்கள் தர்மத்தைக் காப்பாற்ற வேண்டும். இதுவே சிறந்த தர்மம் என்றும் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது.

இந்த "ரிதம்" தவறினால் பிரளயம் :

"பிரளயம்" என்றால் என்ன? ஸ்தூலத்திலிருந்து பிரபஞ்சம் சூக்ஷ்ம நிலைக்கு மாறுவதே பிரளயம். இது நான்கு வகை.

பிரகிருதி பிரளயம் :- படைக்கப்பட்ட யாவும் ஊழிக்கும் அடங்கி பரத்துடன் ஒன்றாவது.

நைமித்திகப் பிரளயம் :- சூரியன் நக்ஷத்திரங்கள் முதலியவை தடுமாறி முடிவுறுதல்.

நித்யப் பிரளயம் :- ஒவ்வொரு வினாடியும் உலகமும் அதன் பொருள்களும் மாறுவதான நிலை.

ஆத்யந்திக பிரளயம்:- ஜீவன் முக்தியடைந்து மீண்டும் பிறவாமை.

இப்பிரபஞ்சம் ஒரு பேரற்புத நியதிக்குட்பட்டு நிற்கிறது என்கிறோம். எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நின்று வேலை செய்து உலகத்தை தாங்கி வரும் நியதியை நாம் "புவனேஸ்வரி" என்கிறோம்.

இந்த சக்தியை விஞ்ஞானிகள் ஆராய்ந்திருக்கிறார்கள். ஒரு நீர்த்துளி முதல் பூமண்டலத்தைப் போன்ற பெருங்கட்டிப் பொருள் வரையிலும், அதற்கு அப்பாலுள்ள எல்லா கோளங்களும் அதனதன் உருவத்தோடு நின்று நிலைத்திருப்பதற்கு காரணம் அணுக்கல் ஒன்றோடொன்று ஒட்டி நிற்கும் இயல்பு.

ஆங்கிலத்தில் இந்த சர்வ வியாபகமான அண்ட சக்திக்கு "கொஹூஷன்" என்று பெயரிட்டிருக்கிறார்கள். பிண்ட சக்தி ஒழிந்து போனால் கல்லும் பொடியாகிப்போகும். நாம் வசிக்கும் வீடு தரையோடு தரையாய் போய்விடும். தனி உருவம் என்பதே இல்லாமல் ஒரே தூசி மயமாகிவிடும்.

பொருள்களில் வடிவ நிலைக்கு காரணமான பிண்ட சக்தியைப் போலவே சிதறிக் கிடக்கும் கோளங்கள் அனைத்தையும் தத்தம் மண்டல ஸ்தானங்களில் நிறுத்திவரும் சர்வ வியாபகமான சக்தி ஒன்று உண்டு. இடைவெளி விட்டு பிரிந்து நிற்கும் பொருள் எல்லாம் ஒன்றை ஒன்று இழுத்துப் பிடித்துக் நிற்கின்றன. ஒரு புல் கட்டை கயிற்று வலையில் போட்டு இறுகக் கட்டினாற் போல உலகம் முழுவதும் சிதறிப் போகாமல் ஒரு பெரும் சக்தியினால் இழுக்கப்பட்டு நிற்கிறது. சதா சுழன்றுக்கொண்டிருக்கும் எண்ணற்ற மண்டலங்கள் அனைத்தும் தத்தம் வட்டத்துக்குள் வடடமிட்டுக்கொண்டு ஆனால் வரம்பு மீறாமல் ஒன்றை யொன்று இழுத்துப் பிடித்துக் கொண்டு நிலைத்து நிற்கின்றன. இந்த பரஸ்பர கவர்ச்சி வேகத்திற்கு "கிராவிடேஷன்" என்று பெயரிட்டிருக்கிறார்கள். ஆகவே எல்லாப் பொருள்களுக்குள்ளும் பரஸ்பரக் கவர்ச்சி சக்தி மறைந்திருக்கிறது. இது பல தோற்றங்களுடன் தன்னைக் காட்டிக்கொள்கிறது. இந்த பரஸ்பரக் கவர்ச்சி பராசக்தியின் ஓர் உருவே. பௌதிகப் பொருள்களில் பரந்து வேலை செய்யும் இணைப்பைப் போலவே ஆன்மாக்கள் அனைத்துள்ளும் ஒரு பரஸ்பரக் கவர்ச்சி சக்தி நின்று வேலை செய்கிறது. ஒவ்வொரு பூத அணுவும் மற்ற அணுக்களை இழுத்துக் கொண்டிருப்பது போல ஒவ்வோர் ஆன்மாவும் மற்ற ஆன்மாக்களோடு பிணைக்கப்பட்டுள்ளது. உயிருள்ள உலகம் சிதறிப்போகமல் இருக்க இதுவே காரணம்.

## உலகின் முடிவு

இந்த உலகம் எவ்வளவு காலம் இருக்கும்? இதைப்பற்றியும் நம் முன்னோர்கள் கணக்கிட்டுள்ளனர். பிரபஞ்சத்தை சிருஷ்டித்த பிரும்மாவுக்கு ஒருநாள் என்பது ஒரு கல்பம். (ஒரு கல்பம் சுமார் 860 கோடி வருஷம்) ஒரு கல்பத்தில் பிரும்மாவின் ஒரு பகல் நேரத்தில் ஆயிரம் உலகங்களை உண்டாக்கி அவருடைய இரவில் அவர் அவைகளை அழித்துவிடுகிறாராம். இதற்கான சக்தியை அவருக்கு அளித்தவள் தேவி புவனேஸ்வரி. அதாவது ஒரு கல்ப காலத்திற்கு ஆயிரம் உலகங்கள் ஆக்கப்பட்டும் அழிந்தும் போகின்றன. இக்கணக்குப்

படி ஒவ்வோர் உலகமும் 43 லட்சம் வருஷம் வாழ்கிறது. இந்த 43 லட்சங்களை நான்கு யுகங்களாக பிரித்திருக்கிறார்கள். முதலாவது கிருத யுகம் (17-லட்சம் வருஷம்), அடுத்தது திரேதா யுகம் (13-லட்சம் வருஷம்), மூன்றாவது துவாபரயுகம் (8.5 லட்சம் வருஷம்). கடைசியாக கலியுகம் (4 லக்ஷத்து 32 ஆயிரம் வருஷம்). இப்போது கலியுகம் ஆரம்பமாகி 5000 ஆண்டு களுக்கு மேல் ஆகிறது.

பூமியின் அழிவைப்பற்றி விஞ்ஞானிகளுக்கும் நமது சாஸ் திரங்களுக்கும் இடையே அபிப்பிராய பேதம் இல்லை. அந்த சர்வ சம்ஹார காலத்தில் எல்லா உயிர்களும் பிரும்மாவிடம் ஒடுங்கும், பிரும்மா விஷ்ணுவிடத்திலும், விஷ்ணு ருத்திர னிடத்திலும், ருத்திரன் மகேஸ்வரனிடத்திலும், மகேஸ்வரன் சதாசிவனிடத்திலும், சதாசிவம் விந்துவினிடத்திலும், விந்து நாதத்தினிடத்திலும், நாதம் சக்தியினிடத்திலும், சக்தி பரமசிவத்திடமும் ஒடுக்கம் பெறுகின்றன. பல பொருள்கள் குவிந்து ஒரு இடத்தில் லயமாவதையும் லயமான இடத்திலிருந்து பலவாக விரிவதையும் உணர்த்துவதை குறிப்பாக உணர்த்தவே சிவபெருமான் தன் கையில் உடுக்கை வைத்திருக்கிறார்.(உடுக்கை க்கு இரு பாகமும் விரிந்து நடுப்பகுதி சிறுத்து இருக்கும்.)

இந்த உலகத்திற்கும் இறைவனுக்குமுள்ள தொடர்புபற்றி தெரிந்துக்கொள்வோம். இறைவனுக்கும் இவ்வுலகிற்கும் உள்ள தொடர்பு மானிட மனத்தால் கண்டறிய முடியாத விஷயம் என்பதை இந்திய ஐரோப்பிய தத்துவ வரலாறுகள் ஒப்புக் கொள்கின்றன. இதை ஏற்று மனித சிந்தனையால் சர்வத்தை யும் கிரஹிக்க முடியாது என்ற அடக்கத்தைக் கொண்டவர்களே மெய்ஞானிகள். பிரபஞ்சம் பல பேதமாக விளங்குகிறது. அது ஒன்றை சார்ந்திருக்க வேண்டியிருக்கிறது. அச்சார்பே பரப் பிரும்மம். இந்த உலகத்திற்கும் பரப்பிரும்மத்திற்குமிடையே நிலவும் சம்பந்தம் பெரிய ஒரு ரகசியம்.

இது பற்றி ஆதிசங்கரர் கூறியுள்ளது : இறைவனின் பரிபூரணத் துவம் இவ்வுலகம் எங்கும் பெருகுகிறது. ஈசனின் அபரித மான சக்திப் பெருக்கு உலகில் பாய்கிறது. அவர் மகத்தான சிற்பி. அவரது லீலா விலாஸமே சிருஷ்டித் தொழில். இது ஸத், சித், ஆனந்த நிலையை உண்டு பண்ணுகிறது. ஸகுணாத்மனாகவும் ஸ்வப்பிரகாசனாகவும் கடவுளை நாம் நோக்குகிறோம். இந்த ஸ்வப்பிரகாச தன்மையே மாயை என்றழைக்கப்படுகிறது. இம்மாயையாக விளங்கும் சக்தியே புவனேஸ்வரி.

# புவனேஸ்வரி வசிக்கும் மணித்வீபம் 3

சத்ரீ பூதம் திரி ஜகத: பவ ஸந்தாய நாசகம்
மணித்வீபஸ்ய பரித: வர்த்ததே ஸுதோததி : ||
யஸ்யாஸ்து பார்ச்வ பாகேஸ்த: நிதீ தௌ சங்க பத்மகௌ
ஸா தேவி புவனேசாநீ: தத் வாமாங்கே விராஜதே ||

தேவி புவனேஸ்வரி வசிக்கும் மணித்வீபம் மூன்று உலகத்தின் சம்ஸார தாபத்தைப் போக்கும் குடைபோல அமைந்துள்ளது.

இந்த மணித்வீபத்தைச் சுற்றிலும் அமிருதமயமான சமுத்திரம் உள்ளது. இந்த உலகம் ஸ்ரீ புவனேஸ்வரி தேவியால் பிரம்ம லோகத்திற்கும் மேல் பாகத்தில் மனதினால் அமைக்கப் பட்டது. மூவுலகிலும் இதற்கு ஈடான அழகு வாய்ந்த நகரம் கிடையாது.

## அம்பிகை வர்ணனை

இத்வீபத்தில் சங்கநிதி, பத்மநிதி இவ்விரண்டிற்கும் நடுவில் தேவி புவனேஸ்வரி ஸ்ரீ பரமேஸ்வரனுடைய மடியில் விளங்கு கிறாள். இதை பின் கண்ட தேவி பாகவத சுலோகங்கள் வருணிக்கின்றன.

சிந்தாமணி கிருஹே...சக்தி தத்வாத்மகை: பரை:
ஸோ பானைர் தச பிர் யுக்த: பஞ்ச கோப்ய திராஜதே ||

பிரும்ம விஷ்ணுச்ச ருத்ரச்ச ஈஸ்வரச்ச ஸதா சிவ: |
ஏதே மஞ்ச குரா : ப்ரோக்தா: பலகஸ்து சதாசிவ: ||

தஸ்யோபரி மஹா தேவ: புவனேசோ விராஜதே: |
யா தேவி நிஜ லீலார்த்தம் த்விதா பூதா பவ பூவஹ ||

இந்த மணித்வீபத்தில் பத்து சக்தி தத்துவங்களாகிற படிக் கட்டுகளுக்குமேல் ஓர் மஞ்சம் விளங்குகிறது. பிரும்மா, விஷ்ணு ருத்ரன், மகேஸ்வரன் இதன் கால்களாகவும், சதாசிவம் பலகை யாகவும் விளங்குகிறார். அவர் மடியில் அம்பிகை வீற்றிருப் பதை வருணிக்கின்றன, பின்வரும் தேவி பாகவத சுலோகங்கள் :

வாமாங்கே ஸன் நிஷண்ணாஸ்ய தேவி ஸ்ரீ புவனேஸ்வரீ
நவரத்னகணா கீர்ண காஞ்சீ தாம விராஜிதா |
தப்த காஞ்சன ஸன்னத்த வைதூர் யாங்கத பூஷணா ||

கனச்ச்ரீ சக்ர தாடங்க விடங்க வதனாம்புஜா
லலாட காந்தி விபவ விஜிதார்த்த ஸுதாகரா ||

பிம்ப காந்தி திரஸ்காரி ரச்சத விராஜிதா
லஸத் குங்கும கஸ்தூரி திலகோத்பாஸி தானனா ||

திவ்ய சூடாமணி ஸ்பார சஞ்சச் சத்தரக ஸூர்யகா
உத்யத் கவி ஸமஸ்வச்ச நாஸாபரண பாஸுரா ||

சிந்தா கலம்பித ஸ்வச்ச முக்தா குச்சா விராஜிதா
பாடீர பங்க கர்ப்பூர குங்குமாலங்க்ருஸ்தநீ ||

விசித்ர விவிதா கல்பா கம்பு ஸங்காச சுந்தரா
தாடி மீ பல பீஜாப தந்த பங்தி விராஜிதா ||

அனர்க்ய ரத்ன கடித முகுடாஞ்சித மஸ்தகா
மத்தாலிமாலா விலஸ்தல காட்ய முகாம்புஜா ||

கலங்க கார்ச்ய நிர்முக்த சரச் சந்திர நிபானனா
ஜான்னவீ ஸலிலா வர்த சோபி நாபி விபூஷிதா ||

மாணிக்ய சகலா பத்த முத்ரி காங்குலி பூஷிதா
புண்டரீக தளாகார நயனத்ய சுந்தரீ ||

கல்பிதாச்வச்ச மஹாராக பத்மராகோஜ்வல ப்ரபா
ரத்ன கிங்கிணி காயுக்த ரத்ன கங்கண சோபிதா ||

மணி முக்தா ஸராபார லஸத்பதக ஸந்ததி :
ரத்னாங்குலி ப்ரவித்த பிரபாஜால லஸத்கரா ||

கஞ்சுகீ கும்பிதாபார நாநாரத்ன ததித்யுதி :
மல்லிகாமோத தம்மில்ல மல்லிகாலி ஸராவ்ருதா ||

ஸுவ்ருத்த நிபிடோத்துங்க குசபாராலஸா சிவா
வர பாசங்குசாபீதி லஸத்பாஹு சதுஷ்டயா ||

ஸர்வ ச்ருங்கார வே ஷாட்யா ஸுகுமாரங்க வல்லரீ
ஸௌந்தர்ய தாரா ஸர்வஸ்வா நிர்வ்யாஜ கருணாமயீ ||

நிஜஸல்லாப மாதுர்ய விநிர் பர்த்ஸித கச்சபீ
கோடி கோடி ரவீந்தூனாம் காந்திம் யா பிப்ரதீ பரா ||

நாதா ஸகீபிர் தாஸிபி: ததா தேவாங்கனாதிபி :
ஸர்வாபிர் தேவதா பிஸ்து ஸமந்தாத் பரிவேஷ்டிதா ||

இச்சா சக்த்யா, ஞான சக்தியா, கிரியா சக்த்யா ஸமன்விதா
லஜ்ஜா துஷ்டி ஸ்ததா புஷ்டி: கீர்த்தி: காந்தி: க்ஷமா தயா ||

புத்திர் மேதா ஸ்மிருதிர் லக்ஷ்மி: மூர்த்தி மத் யோங்கனா:
ஜயா ச விஜயா சைவாப்ய ஜிதா சாபரா ஜிதா|| ஸஸ்மிருதா ||

நித்யா விலாஸிஞ்னீ தோக்த்ரீ த்வகோரா மங்களா நவா
பீட சக்தய ஏதாஸ்து ஸேவந்தே யாம் பராம்பிகாம் ||

யஸ்யாஸ்து பார்ச்வபா கேஸ்த: நிதீ தௌ சங்க பத்ம கௌ
நவரத்ன வஹா நத்ய: ததா வை காஞ்சநஸ்ரவா: ||

ஸப்ததாது வஹா நத்ய: நிதிப்யாந்து விநிர்கதா:
ஸுதாஸிந்த வந்த காமின்ய: தாஸ்ஸர்வா நிருஸத்தம ||

ஸா தேவி புவனேசாநீ தத்வா மாங்கே விராஜதே ||

அப் பரமேஸ்வரது மடியில் சர்வாலங்கார பூஷிதையாக, ஸ்ரீ சக்ர தாடங்கத்தை அணிந்து தாமரை போன்ற முகம், சந்திர பிரபை, சூர்ய பிரபை என்ற ஆபரணங்களை அணிந்து தேவி விளங்குகிறாள்.

---

சந்தனக்குழம்பு, பச்சைக் கற்பூரம், குங்குமம் இவைகளால் அலங்கரிக்கப்பட்ட ஸ்தனபாரம், சங்கம் போன்ற கழுத்து, மாதுளை முத்து போன்ற பற்கள், ரத்னங்கள் இழைத்த கிரீடங்கள், கங்கா ஜலத்தின் சுழல் போன்ற நாபி கமலம், மாணிக்க கற்களால் இழைக்கப்பட்ட மோதிரம், தாமரை தளம் போன்ற மூன்று கண்கள், இவைகளுள்ள அம்பிகை பாச அங்குசங்களுடன் வரத அபய முத்திரையுடன் இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி இவர்களுடன்கூட இந்த தேவி புவனேஸ்வரி மணித்வீபத்தில் விளங்குகிறாள்.

லஜ்ஜை, துஷ்டி, புஷ்டி, கீர்த்தி, காந்தி, க்ஷமை, தயை, புத்தி, மேதை, ஸ்மிருதி, லக்ஷ்மி இவர்கள் திவ்ய ஸ்தீரிகள் ரூபம் கொண்டு அம்பிகையை சூழ்ந்து நிற்கிறார்கள்.

விஜயா, அஜிதா, அபராஜிதா, நித்யா, விலாஸினி, தோக்த்ரீ, அகோரா, மங்களா, நவா இப்பீட சக்திகள் புவனேஸ்வரியை சேவிக்கிறார்கள்.

## அமெரிக்கா தான் பாதள தேசமா?

காமகோடி பெரியவர்கள் முன்பொரு சமயம் குறிப்பிட்டதாவது :

"பகீரதன் கங்கையை கொண்டு வந்த சரித்திரம் எல்லோருக்கும் தெரியும். ஸகரர்கள் அறுபதினாயிரம் பேர் பூமியைப் பறித்து பாதாள லோகம் போனார்கள். கபிலருடைய ஆஸ்ரமத்தில் அஸ்வமேத குதிரை இருப்பதைக் கண்டு அவரைக் கஷ்டப்படுத்தினார்கள். அம்முனிவர் தியானத்தில் இருந்தார். அவர் கண் திறந்தபோது அனைவரும் பஸ்மமானார்கள். அந்த சாம்பல்மீது பாயச்செய்யவே பகீரதன் கங்கையை கொண்டு வந்தான். கபிலர் ஆஸ்ரமம் பாதாள லோகத்தில் இருப்பதாக கூறப்பட்டுள்ளது. இந்த கபிலர் ஆஸ்ரமத்தைதான் "கலிபோர்னியா" என்று அழைக்கிறார்கள். அதற்கு பக்கத்தில் ஹார்ஸ் ஐலண்ட் (Horse Island) என்ற தீவும் ஆஷ் ஐலண்ட் (Ash Island) என்ற தீவும் இருக்கின்றன. குதிரை கட்டிய இடமும் சாம்பல் இருந்த இடமும் இவை."

---

## சாகம்பரியும் அவளே

சாகம்பரீம் ஸ்துவன் தயானன் ஜபன் ஸம்பூஜயன் நமன்
அக்ஷயம் அச்னுதே சீக்ரம் அன்ன பானம் ருதம்பலம்

முன்னொருகாலத்தில் நூறு வருஷகாலம் மழையே பொழியாமல் தண்ணீர் பஞ்சம் ஏற்பட்டது. மகரிஷிகள் புவனேஸ்வரியை ஸ்தோத்திரம் செய்தனர். ஸ்ரீ புவனேஸ்வரி ஆவிர்பவித்து தன் நூறு கண்களால் மகரிஷிகளுக்கு அனுக்ரஹம் செய்தாள். அதனால் அவளுக்கு சதாக்ஷி என்ற பெயர் ஏற்பட்டது. மழை பொழிய வைத்து பஞ்சம் நீங்கும் வரை ஜீவர்களின் உடலில் நிலைப்பதற்கான உணவுப் பொருள்களை தன் சரீரத்திலிருந்து கொடுத்து புவனேஸ்வரி மாதா 'சாகம்பரீ' என்ற பெயரை அடைந்தாள். இந்த சாகம்பரி பற்றி சப்தசதி (தேவி மகாத்மியம்)யில் மூர்த்தி ரகஸ்யத்தில் விசேஷமாக சொல்லப் பட்டிருக்கிறது.

# தேவி பாகவதத்தில் * புவனேஸ்வரி 4

புவனநாயகி பூதர்கள் நாயகி புராரி
யவனை நாயகனனெச் சொல்லும் நாயகி அரிய
தவமுருற்றுவோர்க் கருள் செய்யும் தற்பரை சாந்தச்
சிவையைப் போற்றுவார் சித்திகள் பெற்றருள் சேர்வார்

உபநிஷத்துக்கள் உலகத்துக்குக் காரணமான பிரும்மத்தை விளக்கும்போது "பருமனுமில்லை மெல்லியதுமில்லை, குறுகியது மில்லை நீண்டதுமில்லை - கண் முதலான இந்திரியங்களால் காணமுடியாதது" என்று கூறுகிறது. இதுதான் நிர்குண சக்தி. ஆனால் அதுவே சகுண சக்தியாக பரிணமித்து ஜீவன்களை உண்டு பண்ணி அதனிடம் தானே பிரவேசித்து அந்த ரூபமாகவே விளங்குகிறது.

ஜனமேஜயன் வியாஸரைப் பார்த்து, தேவி என்பவள் யார்? அவள் எந்தெந்த உருவெடுத்தாள்? மும்மூர்த்திகள் அவரவர்கள் காரியங்களை செய்யும்படி இயக்குபவள் யார்? என்ற கேள்வி களைக் கேட்கிறான். வியாசர் பதில் சொல்கிறார்.

உலகம் தோன்றுமுன் ஜலம் மட்டும் இருந்தது அதில் மகா விஷ்ணு சயனித்திருக்கிறார். அவர் நாபியிலிருந்து பிரும்மா உண்டாகிறார். பிரபஞ்சத்தை எப்படி படைப்பதென்று தெரி யாமல் தவிக்கிறார். தவம் செய்கிறார். அங்கு ருத்திரனும் வருகிறார். அங்கு தோன்றிய விமானத்தில் பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் மூவரும் ஏறி பல உலகங்கள் சென்று தேவலோகம் வந்தனர்.

---

*தேவி பாகவதம்: இதில் பராசக்தியின் மகிமை மிக விஸ்தார மாக வருணிக்கப்படுகிறது. தேவி திரிசதி என்ற நாமாவுக்கேற்ற 300 அத்யாயங்கள் அமைந்துள்ளன. (மொத்தம் 318) 18000 சுலோகங்கள். தேவி காயத்ரீ வடிவமானவள் ஆதலால் காயத்திரி யைப் பற்றிய சகலவிதமான விவரங்களும் அதில் வர்ணிக்கப் படுகின்றன. காயத்ரி புரஸ்சரணம் ஸகஸ்ரநாமம் கலசம், ஒவ்வொரு எழுத்திற்கும் ரிஷி, சந்தஸ், தேவதை, வர்ணம், பயன், சக்தி, காயத்திரி ஹோமம் முதலியவை இடம் பெற்றுள்ளன.

பிரும்ம ரஹஸ்யம் பிரக்ருதி காண்டத்தில் தேவி பாகவத மஹிமை மூன்று அத்யாயங்களில் வருணிக்கப்படுகிறது. முக்கியமாக தேவி பாகவதத்தில் புவனேஸ்வரி மகிமை வர்ணிக்கப்பட்டுள்ளது.

அங்கு இந்திரன் இந்திராணியைக் கண்டனர். அடுத்தக்ஷணம் பிரும்மலோகம் சென்று பிரும்மதேவனை பார்க்கிறார்கள். பிரும்மா இங்கு ஒரு பிரும்மாவைப் பார்த்து ஆச்சரியப்படுகிறார். ஸ்ரீவைகுண்டம் போனால் அங்கு ஒரு நாரயணன் இருக்கிறார். மகா கைலாயத்தில் பரமசிவன் காணப்பட்டார். பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் மூவருக்கும் தாங்கள் யார் என்ற சந்தேகம் வந்து விட்டது!

கடைசியில் அம்பிகை இருக்கும் மணித்தீவிபத்திற்கே வருகிறார்கள். அங்கு அம்பிகை ஸ்ரீபுரத்தில் சிந்தாமணி கிருஹத்தில் வீற்றிருக்கிறாள். அவளை தூரத்திலேயே கண்டதும் மகா விஷ்ணுவுக்கு பிரளயகாலத்தில், தான் ஆலிலைமீது படுத்து கால் கட்டை விரலை வாயில் வைத்திருந்தபோது தனக்கு உபதேசித்தவள் அந்த அம்பிகை என்ற நினைவு வருகிறது.

"என்னை அப்போது பாதுகாத்து தாலாட்டியவள் இந்த அன்னைதான்" என்று விஷ்ணு கூறி அம்பிகை அருகில் போகலாம் வாருங்கள் என்று பிரும்மாவையும் ருத்திரனையும் அழைத்துக் கொண்டு முன் சென்றார்.

## மும்மூர்த்திகளும் பெண்களானார்கள்*

அம்பிகையின் அருகில் இருப்பவர்கள் எல்லோரும் ஸ்திரீகள். அடடா! நாம் புருஷர்களாயிற்றே! எப்படி அம்பிகையின் அருகில் போவதென்று நினைக்கும் போதே அம்பிகை இவர்களைப் பார்த்தாள். உடனே பிரும்மா. விஷ்ணு ருத்திரன் மூவரும் பெண்களாயினர். மூவரும் அம்பிகையின் அருகில் சென்று வணங்குகின்றனர். அம்பிகையின் கட்டைவிரல் காந்தியில் 14 புவனங்களும் இவர்களுக்குத் தென்படுகிறது.

---

*திரு ஈங்கோய்மலை என்ற தலத்தில் காணப்படும் படத்தில் (திருச்சி மாவட்டம்) தேவி, பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், மகேஸ்வரன் என்ற நால்வரும் கால்களாகவுள்ள பீடத்தின் மீது அமர்ந்து காணப்படுகிறாள். இந்த நால்வருக்கும் பெண்கள் உடையே அணிவிக்கப்படுகிறது. மயிலை கபாலி கோயிலில் திரு ஈங்கோள் மலை அம்பிகை படத்தைப் பார்க்கவும்.

## விஷ்ணு ஸ்துதி

முதலில் விஷ்ணு தேவியை துதித்தார்.

தேவி உமக்கு நமஸ்காரம். பிரகிருதியாகவும், படைப்பவளாகவும், இஷ்டத்தை அளிப்பவளாகவும் இருக்கின்றீர், சச்சிதானந்த ரூபி நீ. புவனேஸ்வரி! நீ எல்லாவற்றிற்கும் இருப்பிடமானவள். ஹிருல்லேகா வடிவமானவள். உலகம் உன்னிடம் ஒடுங்கும் போது அஸத்தாகவும் சிருஷ்டி காலத்திலும் சத்தாகவும் இருக்க அருள் செய்கிறாய். இது இந்திரஜால வித்தை, மதுகைடபரிடமிருந்து என்னை காப்பாற்றினீர். நீயே ஆதார சக்தியாக இருந்து உலகை ரக்ஷிக்கிறீர். புத்திமான்களிடம் வித்தையாயும், சக்தியுள்ளவரிடம் சக்தியாகவும் இருக்கிறீர். காயத்ரி, ஸ்வாஹா, ஸ்வதா, அர்த்த மாத்ரா ரூபிணியான மஹா வித்தையே உனக்கு நமஸ்காரம்.

## பரமசிவன் ஸ்துதி

பரமசிவன் அன்னையை பின்வருமாறு துதித்தார்.

உன்னிடமிருந்து நாங்கள் மூவரும் தோன்றினோம். பஞ்ச பூதங்களாகவும் மனம், புத்தி, அகங்காரம் எனும் காரண ரூபமாகவும் இருப்பவள். நீ உன் அருளால் சராசரமான உலகைப் படைத்துக்காத்து அழித்து வருகிறோம். உன் பாததூளியைக் கொண்டே எங்கள் தொழில் நடைபெறுகிறது.

தேவி சிவனுக்கு நவாக்ஷரியை உபதேசிக்க, அவர் அதை ஜபித்துக் கொண்டு நிஷ்டையில் அமர்ந்தார்.

## பிரம்மா ஸ்துதி

பிரும்மா தேவியை ஸ்தோத்திரம் செய்யததாவது: பரமசிவன் உன்னைப்போற்றிப் புகழ்ந்து உன் கருணையைப் பெற்றார். வேதங்களுக்கே உன் ஸ்வரூபம் தெரியவில்லை. உன் மகிமையை அறியாதலால் நான் எல்லாம் அறிந்தவன், பதினான்கு உலகையும் படைப்பவன் என்று கர்வம் கொண்டேன். என் கர்வம் தங்களை தரிசித்ததால் அகன்றது. உன்னை நன்கு அறிந்தால்தான் அக்ஞானம் என்னும் துன்பம் அகலும்.

பிருத்வி முதல் நாதாந்தம் வரையிலுள்ள தத்துவங்களை விசாரித்து அவையல்ல நான். அதற்கு மேலானவன் என்று கண்டறிவதே ஞானம் என்று சிலர் நினைக்கின்றனர். உன் கடைக்

கண்ணே சர்வ பிரபஞ்சத்தையும் படைக்கவல்லது. அப்படியிருக்க மும்மூர்த்திகளைப் படைத்து அவர்கள் மூலமாக பிரபஞ்ச சிருஷ்டி, ஸ்திதி, லயம் என்கிற லீலையைச் செய்கிறீர்.

"வேதசாஸ்திரங்களை நன்கு விசாரித்தால் மாயா ஸ்வரூபிணியான நீயும் மாயையைக் கடந்தவராகிய பரமசிவமும் தவிர மூன்றாவது வேறொரு பொருளில்லை என்பது நிச்சயம். ஒன்றே பிரும்மம் என்று வேதம் கூறுகிற ஒன்று நீயா? பரமசிவமா? அல்லது இரண்டும் சேர்ந்த ஒன்றா? நீ ஆணா, பெண்ணா, இரண்டுமா, இரண்டுமல்லாதவளா? எங்கள் சந்தேகத்தை விளக்கவேண்டும்."

## தேவியின் பதில்

தேவியின் பதிலளித்ததாவது:

தேவி பரமசிவன் என்ற நாங்கள் இருவரும் ஒன்றே. அவரே நான். நானே அவர். உலகைப்படைக்கும் போது இரண்டாக ஆனோம். இந்த இரண்டு என்பதும் ஒரே தீபத்தினருகில் இரு கண்ணாடிகளை வைத்தால் இரு தீபங்கள் தெரிவது போலாம். இதுவே த்ருஸ்யம், அத்ருஸ்யம் எனப்படும்.

சர்வ சம்ஹார காலத்தில் நான் ஆணுமல்ல, பெண்ணுமல்ல, அலியுமல்ல, சிருஷ்டி காலத்தில் புத்தி, சம்பத், தைரியம், கீர்த்தி, நினைவு, சிரத்தை, தீர்க்காலோசனை, தயை, லஜ்ஜை, பசி, தாகம், பொறாமை, சாந்தி, நித்திரை, கிழத்தன்மை, ஞானம், அக்ஞானம், ரத்தம், மாமிசம் முதலிய நானாவித வஸ்துக்களாக இருக்கிறேன். ஆதலால் எல்லாம் நானே.

புவனேஸ்வரி தேவி பிரும்மனைப் பார்த்து இந்த சரஸ்வதியை உனக்கு சக்தியாக தருகிறேன். இச்சக்தி உன்னை விட்டுப் பிரிய மாட்டாள். என்னுடைய அம்சமான இவளுடன் நீ சத்திய உலகம் சென்று ஆன்மாக்களின் கன்மத்திற்கேற்ப சிருஷ்டிப்பாயாக என்றாள்.

பின்னர் விஷ்ணுவிடம் "இம்மகாலக்ஷ்மியை உனக்கு சக்தியாகக் கொடுக்கிறேன். என்னால் தரப்பட்ட சகல சம்பத்துகளையும் கொடுக்கும் இச்சக்தி உன் மார்பிலேயே எப்போதும் வீற்றிருப்பாள். இச்சக்தியுடன் நீ வைகுண்டம் சென்று காத்தல் தொழிலை செய்து வருவாயாக" என்றாள்,

பின் ருத்ரமூர்த்தியைப் பார்த்து "கௌரியை சக்தியாகக் கொண்டு சம்ஹார கிருத்தியம் செய்துகொண்டு இருப்பீராக" என்று அனுக்கிரகம் செய்து சிவ தத்துவ சக்தி தத்துவ உண்மை களை உபதேசித்தாள்.

பின்னர் மூவரையும் நோக்கி அம்பிகை, "நீங்கள் முத்தொழி லுக்கும் கர்த்தாக்களாகையால் அவ்வத் தொழில்களுக்குரிய குணங்களையே பிரதானமாகக் கொண்டு வாழுங்கள். உங்களுக்கு இடையூறு வருங்காலத்தில் என்னை தியானியுங்கள் நானும் பரமசிவமுமே தியானிக்கத்தக்கவர்கள். உமாமகேஸ்வரர்களாகிய எங்களை தியானித்தால் சர்வ காரியமும் சித்தியாகும்" என்றாள்.

மும்மூர்த்திகளுக்கும் ஸ்திரீ ரூபம் மறைந்து சுயரூபம் பெற்றனர்.

தேவி புவனேஸ்வரியின் அருளை அடைந்த பிரும்மா, விஷ்ணு, சிவன் என்கிற மும்மூர்த்திகளும் தங்கள் அஞ்ஞானம் விலகி மெய்ஞ்ஞானம் பெற்று தங்கள் காரியங்களைச் செய்கிறார்கள். அம்பிகை பிரும்மாவுக்கு மஹா சரஸ்வதியையும், விஷ்ணுவுக்கு மகா லக்ஷ்மியையும், ருத்ரனுக்கு மகா காளியையும் திருமணம் செய்து வைக்கிறாள்.

ஜனமேஜயன் இந்த தேவி யார் என்று கேட்டானே? அதற்குப் பதில் வேண்டாமா? தேவியே ஹிமவானிடம் தன்னைப் பற்றி கூறியதாவது:

"நானே உலகம் உண்டாவதற்கு முன் இருந்தேன். மற்றொன் றும் அப்போது இல்லை. அறிவு வடிவமான என்னை தர்க்கத்தினா லும் கண்டு பிடிக்க முடியாது. அடையாளங்களால் காண்பிக் கவும் முடியாது. திருஷ்டாந்தம் சொல்லியும் அறிவிக்க முடியாது. அவ்விதமுள்ள எனக்கு மாயா என்று ஒரு சக்தியுள்ளது. அது என்னிடம் எப்போதும் உள்ளது. அதை தனியாக இருக்கும் என்றும் இல்லை என்றும் எந்த ரூபமாக இருக்கும் என்றும் எதுவும் சொல்ல முடியாது. ஆனால் நெருப்பில் சூடு போலும் சந்திரனிடமுள்ள குளிர்ச்சிபோலும் தன்மை என்னிடமுள்ளது. இதில் பிரளயகாலத் தில் ஜீவர்களின் புண்ணிய பாபங்கள் எல்லாம் உறக்கத்தில் உலக விவகாரம் அடங்கியிருப்பது போல அடங்கியிருக்கின்றன. மறுபடி உலகம் உண்டாகும்போது அதைக்கொண்டு புவனங்களை சிருஷ்டித்து அதனுள் பிரவேசிக்கிறேன். நானே அறிவு வடிவமானதால் நிமித்த காரணமாயும் எனது சக்தி உலகமாக மாறுவதால் உபாதான காரணமாயும் ஆகிறேன்.

## விசுவரூப தரிசனம்

இப்படி கூறிவிட்டு அம்பிகை தன் விசுவரூப தரிசனத்தைக் காட்டுகிறாள்.

அம்பாளின் தலை பாகம்-மேலுலகம், சூர்ய சந்திரர்கள்-கண்கள், திசைகள்-காதுகள், அச்வினி தேவர்கள்-மூக்கு, அக்னி-முகம், இரவும் பகலும்-இமைகள், வாயு-பிராணன், உலகம் முழுவதும்-ஹிருதயம்.

மஹர்லோகம் - கழுத்து
ஜனலோகம் - வாய்
தபலோகம் - நெற்றி
இந்திராதிகள் - கைகள்
யமன் - பற்கள்
சமுத்திரம் - வயிறு
ஆறுகள் - நரம்புகள்
மரங்கள் - கேசம்
சந்திரன் - மனம்
விஷ்ணு - ஞானம்
ருத்ரன் - அந்தக்கரணம்

படைப்பு, காத்தல், அழித்தல் என்ற கிருத்யங்களைச் செய்வதற்காக ஒரே பரமாத்மாதான் பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்று ரூபம் கொள்கிறது. கிருத்யங்களுக்கு ஏற்றபடி அந்தந்த மூர்த்திகளுக்கு குணம், வர்ணம், அவஸ்தை எல்லாம் இருக்கின்றன. இந்த மூன்று என்ற வட்டத்தைத் தாண்டும்போது இம்மூன்றுக்கும் காரணமான பராசக்தி ஒன்று எஞ்சி நிற்கிறது. அவளே துரீயசக்தி "புவனேஸ்வரி".

அம்பாள் ஸௌம்யமாக இருந்துகொண்டு, உங்களுக்கு இந்த ரூபத்தைப் பார்க்கத்தகுதி இல்லாமற்போனாலும் பக்தவாத்ஸல்யம் காரணமாகக் காண்பித்தேன். யோகம், தவம், அத்யயனம் ஒன்றாலும் பார்க்கமுடியாது. ஹ்ரீம் என்பது எனது மூல மந்த்ரம் அதில் "ஹ" என்பது ஸ்தூலதேஹம், "ர" என்பது ஸூக்ஷ்மம், "ஈ" என்பது காரணம். பிந்து துரீயம் இது ஸர்வ மந்த்ரஸாரம், என்று உபதேசித்து அஷ்டாங்க யோகம், பக்தி ஸாதனங்கள், எந்த எந்த க்ஷேத்ரங்களில் எந்த ரூபமாக உபாஸிக்கவேண்டும். விரதங்கள், நியமங்கள், உபாஸன பேதங்கள், பூஜா விதிகள் மற்றும் பல விஷயங்களை உபதேசித்து ஹ்ருதயத்தில் நான் இருக்கிறேன் மனதால் சிந்திக்க வேண்டும் என்று பூர்த்தி செய்கிறாள். இதை தேவீ கீதை என்று சொல்லுகிறார்கள். இங்கு தேவர்கள் புவனேச்வரியைக் கண்டோம் என்று ஸந்தோஷிக்கின்றனர். இது புவனேச்வரியின் தத்துவம். சாஸ்திரங்களில் ஸாரம் கூறப்பட்டது.

## வேதங்கள் செய்த ஸ்துதி

வேதங்களே தேவியை ஸ்தோத்திரம் செய்வதாக 16 சுலோகங்கள் தேவி பாகவதத்தில் உள்ளன.

நமோ தேவி மகா மாயே விஸ்வோத் பத்தி கரே சிவே
நிர்குணே ஸர்வ பூதேஸி மாத: சங்கர காமதே ||

இந்த 16 சுலோகங்களின் கருத்து:- நீயே பூமி, பிராணிகளின் பிராணன், புத்தி லக்ஷ்மி காந்தி பொறுமை, சாந்தி சிரத்தை, மேதை தைர்யம், ஸ்ம்ருதி, பிரணவம், காயத்ரி, வ்யாஹ்ருதீ, ஜயா, விஜயா, பூமி, லஜ்ஜா, கீர்த்தி, ஆசை, தயை (சப்த சதியில் "யாதேவி சர்வ பூதேஷு" சுலோகங்களின் அர்த்தமும் இதுதான்.)

ஜகன்மாதா! நீயே ஹரிஹராதி ஸமஸ்த தேவர்களையும் படைத்தாய், உலகை படைத்து காத்து அழிக்கும் மும்மூர்த்திகளையும் சிருஷ்டித்தாய். தேவரில் ஒருவரும் உன் மகிமையை அறியார். நீ ஒருவளே இந்த உலகெல்லாம் பரவியிருக்கிறாய். நீ ஆசையற்றவள். வேதங்களுக்கும் எட்டாத உன் பாத மகிமையை நீயே அறியமாட்டாய்.

இந்த ஸ்துதி வேதத்திற்கு சமமானது.

மகரிஷிகளுக்கு ஒரு சந்தேகம் வந்துவிட்டது. தெய்வங்களில் யார் பெரியவர்? சிவனா, பிரும்மாவா, விஷ்ணுவா? இதற்கு ஸூதர் பதில் சொல்கிறார்.

பிரும்மாவிடம் படைக்கும் சக்தி, விஷ்ணுவிடம் பரிபாலன சக்தி, ருத்ரனிடம் சம்ஹார சக்தி, சூர்யனிடம் பிரகாச சக்தி, அக்னியிடம் தஹிக்கும் சக்தி, வாயுவினிடம் வீசும் சக்தி, ஆதிசேஷனிடம் பூமியை சுமக்கும் சக்தி உள்ளன.

இவ்வளவுக்கும் ஆதி காரணமாக ஒரு சக்தி உண்டு. அவளே பராசக்தி. அவள் ஒவ்வொரு ஜீவனிடமும் குண்டலினி என்ற பெயருடன் இருக்கிறாள், அவள் இல்லையேல் சிவனும் சவமாவார். புழு முதல் பிரும்மாவரை தன்னால் ஒரு காரியத்தை செய்ய முடியாவிடில் தனக்கு சக்தியில்லை என்றே கூறுவர். விஷ்ணு இல்லை, அக்னி இல்லை என்றெல்லாம் கூறுவதில்லை.

எங்கும் இருக்கிற அந்த சக்தியே பிரும்மம் எனப்படுகிறது. அவளே உபாஸிக்கத்தக்கவள். விஷ்ணுவிடம் சாத்வீக சக்தியாகவும், பிரும்மனிடம் ராஜஸ சக்தியாகவும், ருத்ரனிடம் தாமஸ

சக்தியாகவும், நிற்குணமாகவும் இருப்பவள் அவளே. பற்பல பிரும்மாண்டங்களைப் படைத்து தனக்குள் ஒடுக்குபவள் அவளே, தேவர்கள், பிரும்மாதிகள் நிமித்த மாத்திரமே ஆவர். அன்னையின் அருளில்லாதவர்கள் சக்தியில்லாதிருப்பதை பிரத்யக்ஷமாகக் காணலாம்.

அம்பிகையின் ஆணைப்படி பிரும்மா, விஷ்ணு, ருத்ரர், சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்பதைச் செய்கிறார்கள் என்கிறோம்.

இம் மூன்றுத் தொழிலும் நம் வாழ்வில் தினம் நடைபெறுகிறது. சொப்பனம் என்பது படைப்பு, அப்போது நாம் சிருஷ்டி செய்கிறோம். விழிப்பு நிலையில் நம் குடும்ப சம்பரக்ஷணைக்காக பல காரியங்களை செய்கிறோம். இது ரக்ஷகத் தொழில்.

ஸுஷுப்தி என்ற தூக்கத்தில் இந்திரியம், மனசு எல்லாம் ஓய்ந்து விடுகிறது. இது சம்ஹார நிலை.

அண்டத்திலும் நடைபெறும் படைப்பு, காப்பு, அழிப்பு, பிண்டத்திலும் நடைபெறுகிறது. அம்பிகையின் அருளால்தான் இம்மூன்றும் நடைபெறுகிறது.

இம்மூன்று நிலைக்கு அப்பாற்பட்டும் உள்ள நிலையான துரீயமே அவள். ஆனந்தம் தவிர வேறு எந்த நிலையும் இராததே துரீயம். (கற்கண்டின் எப்பாகத்தை சுவைத்தாலும் தித்திக்கும் அது போல)

இது குறித்து காஞ்சி காமகோடிப் பெரியவர்கள் குறிப்பிட்டுள்ளதாவது:

"சிருஷ்டியிலும் ஸ்திதியிலும் நிறைவான ஆனந்தம் இல்லை. சம்ஹாரத்தில் ஓரளவு ஆனந்தம் இருந்தாலும் ஆனந்தமாக இருக்கிறோம்" என்ற பிரக்ஞையில்லை. ஆகவே இதுவும் பிரயோஜனமில்லை.

துரீயத்தில்தான் இந்த மூன்றும் அடிப்பட்டுபோய் இவற்றுக்கு ஆதாரமான ஒரே சத்தியம் மட்டும் ஆனந்த ரூபமாக பூரண பிரக்ஞையுடன் பிரகாசிக்கிறது. அந்த ஒன்றுதான் மாயையால் இம்மூன்றாகத் தெரிந்தது. மாயை போனால் மூன்றும் போய்விடும் துரீயமான ஒன்று மட்டும் நிற்கும். ஜீவனை இந்த மூன்றின் கட்டிலிருந்து. (மாயா பந்தத்திலிருந்து) அம்பிகை விடுவித்தால் அந்த ஆனந்தத்தை அனுபவிக்கலாம்.

இந்த உலக மாயையில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் போதே பரீட்சையில் பாஸ்செய்வது, உத்யோகத்தில் பிரமோஷன் பெறுவது வியாதி வந்தால் குணமாவது இதற்கெல்லாம் பிரார்த்தனை செய்கிறோம். பிரார்த்தனை நிறைவேறி விட்டால் "அம்பிகை அனுக்கிரகம் செய்து விட்டாள்" என்கிறோம்.

ஆனால் அம்பிகையின் பஞ்சக் கிருத்தியங்களில் "அனுக்கிரகம்" என்றால் மாயா லோகத்திலிருந்து நம்மை விடுவித்து நம்முடைய ஆத்ம ஸ்வரூபமான மோக்ஷ நிலையில் சேர்ப்பிப்பதையே குறிக்கும் இதைத்தான் லலிதா சகஸ்ரநாமம்.

சிருஷ்டிகர்த்ரீ பிரும்மரூபா கோப்திரி கோவிந்த ரூபிணி
சம்ஹாரிணி ருத்ர ரூபா த்ரோதானகரீஸ்வரி
சதாசிவ அனுக்கிரதா பஞ்சக்கிருத்ய பராயணா
என்று கூறுகிறது.

தேவி பாகவதத்தில் புவனேஸ்வரி தேவியின் அருள் விலாசம் மேலும் விவரிக்கப்படுகிறது.

நான்காவது ஸ்கந்தத்தில் ராமருக்கு அம்பிகை அருள் செய்தது குறிப்பிடப்படுகிறது. சீதையைப் பிரிந்து சோகமுற்றுள்ள ராமனை நாரதர் சந்தித்து, ராவண சம்ஹாரத்திற்குப் பராசக்தியின் அருள் வேண்டும் என்று நவாஹயக்ஞத்தை நடத்தி வைக்கிறார். அஷ்டமியன்று நடு இரவில் அம்பிகை ஆவீர்பவித்து ஆயுதங்களைக் கொடுத்து மறைகிறாள்.

சுகன்யை என்பவள் ஒரு வயதான ரிஷிக்கு (சியவனர்) வாழ்க்கைப்பட நேரிடுகிறது. அசுவினி தேவர்கள் அவள் கற்பை சோதிக்க வந்து தோல்வியடைந்து சியவன முனிவரை வாலிபராக்கி விடுகின்றனர். அசுவினி தேவர்கள் போலவே சியவனரும் தோன்றவே யார் தனது கணவன் என்பது சுகன்யைக்கு கண்டு பிடிக்க முடியவில்லை. புவனேஸ்வரி இவள் பக்திக்கு மெச்சி இவளுடைய கணவனை அடையாளம் காட்டுகிறாள்.

தேவி மகாத்மியத்தில் கூறப்படுவது போலவே தேவி பாகவதத்திலும் மகிஷாசுர வதம் வருணிக்கப்படுகிறது.

அம்பாளுக்கு ஞான சக்திப் ப்ரதானமான அவதாரம். கீழ் கூறியது கிரியாசக்தி. ப்ரதானமான அவதாரங்கள்: துர்க்கை,

காளி, சாகம்பரீ, சாமுண்டா முதலியன. மேலும், ஸ்வாஹா, ஸ்வதா, தக்ஷிணா, மநஸா உபாக்யானங்களும் ராதா ஆவிர் பாவமும் லக்ஷ்மீ, துளஸீ, ஸாவித்ரீ முதலிய சரிதங்களும் கூறப்பட்டுள்ளது. கடைசி ஸ்கந்தத்தில் காயத்ரீரூபிணியாக ஸூர்ய மண்டலத்தில் இருந்து அவளே உலகத்திற்கு ஒளியைக் கொடுக்கிறாள், அவளை உபாஸித்தால் எல்லா தேவதைகளை யும் உபாஸித்த பலன் கிடைக்கிறது என்று கூறி, காயத்திரீ கவசம் ஹ்ருதயம், ஸஹஸ்ரநாமம், புரச்சரண விதி முதலியவை காயத்ரீதத்வம் இருபத்தினான்கு அக்ஷரங்களுக்கும் ரிஷி சந்தஸ் தேவதை. ஜப விதானம் சொல்லிய பிறகு மணித்வீப வர்ணனம் 25 தத்துவங்களும் ப்ராகாரமாக அமைந்து, ஒவ்வொரு ப்ராகாரங் களிலும் வஸிக்கும் ஸித்தர்கள், தேவர்கள், ஞானிகள், அம்பாளின் 64 சக்திகள், 32 சக்திகள், 16 சக்திகள், 8 மந்திரிகள் அவர்களுடைய ப்ரபாவம், அம்பாள் வாஸம் செய்யுமிடத்தில் ச்ருங்கார மண்டபம், ஞான மண்டபம், முக்திமண்டபம், ஏகாந்த மண்டபம் என்று நான்கு மண்டபங்கள் ப்ரும்ம, விஷ்ணு, ருத்ர, ஈஸ்வரஸதாசி வர்கள் ஆஸனத்தின் பாதங்களாகவும், உட்காருமிடமாகவும் அமைந்திருப்பதையும் அந்த ஸிம்மாஸனத்தில் நவயௌவனஸம் பன்னனான பரமசிவ மூர்த்தியின் மடியில் வீற்றிருக்கிறாள், அறிவு ஆனந்தம் எல்லாவற்றிருக்கும் முடிவான இடம் என்று வர்ணித்து காயத்ரீ சந்தஸ் 24 எழுத்துக்கள், அதனால் ஆரம்பித்து அதனால் பூர்த்தி செய்கிறார் வேதவ்யாஸ பகவான்.

இவ்விதம் புவனேஸ்வரியை நமது கண்களால் பார்க்கும்படி புதுக்கோட்டையில் ஆச்சரியமான ஆலயத்தைக் கட்டி அம்பாளை ப்ரதிஷ்டை செய்து தினந்தோறும் காலங்களில் பூஜை, நைவேத்யம், ப்ரதி வருஷமும் ஆவிர் பாவ தினம், லக்ஷம், கோடி கணக்கில் ஜபம், ஹோமம் செய்வித்து அம்பாளுடைய அருளை உலகத்திற்கு வாரிக் கொடுப்பதுடன் - சேலம் ஸமீபத்தில் ஸ்கந்த கிரியில் கலியுக வரதனான முருகன் ஆலயத்தையும் கட்டி ப்ரதிஷ்டை செய்து ஜனங்களனைவருக்கும் அருள்புரியும் பரம ஹம்ஸ அவதூத ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் புவனேஸ்வரியே மனித உருவத்தில் நமக்கு காக்ஷியளிக்கிறான் என்று எல்லோரும் நினைக்கும்படி செய்து வருகிறார்கள்.

# புவனேஸ்வரியின் ஏகாக்ஷரி மந்திரம் 5

ஹ்ரீம்காரமேவ தவநாம தவேவ ரூபம்
த்வந் நாம துர்பலமிஹ திரிபுரே க்ருணந்தி |
த்வத் தேஜஸா பரிணதம் வியதாதி பூதம்
ஸௌக்கிய தனோதி ஸரஸீருஹ ஸம்பவாதே - ஆதிசங்கரர்.

ஹ்ரீம் என்ற சொல்லே தங்கள் பெயர் என்றும், தங்கள் ஸ்வரூப மென்றும் இந்நாமம் இவ்வுலகில் கிடைப்பது மிக அரிது என்றும் கூறுகிறார்கள்.

தங்களுடைய தேஜஸால் ஆகாயம் முதலிய பூதங்கள் உண்டானதாயும், அவை புவனங்களாக மாறி பிரும்மா முதலிய வர்களுக்கு சௌக்யத்தைக் கொடுப்பதாகச் சொல்கிறார்கள்.

ஹ்ரீம் கார ரூபிணியான அம்பிகே உனக்கே நமஸ்காரம்.

ஹ்ரீம் தேவியின் பிரணவம் எனப்படும். இதை மூல பீஜம் மாயா பீஜம் எனக் கூறப்படுகிறது. இதற்கு புவனேஸ்வரி பீஜம் என்ற பெயரும் உண்டு. ஹ்ருல்லேகா பீஜம், சிந்தாமணி பீஜம், லஜ்ஜா பீஜம் என்றும் பலவிதமாக இது அறியப்படுகிறது.

ஹ்ருல்லேகா என்றால் இருதயத்தில் கொடி போலச் செல்லும் ஒரு சக்தியைக் குறிக்கும். மூலாதாரம் முதல் சகஸ்ராரம் வரை செல்லும் இச்சக்தியைத்தான் குண்டலினி சக்தி என்கிறார்கள்.

ஹ்ருதிலேகேவ ஜாகர்திப் புகாண சக்தி ரியம் பரா
ஹ்ருல்லேகா கத்யதே தஸ்மாத் ஹிருதயாகார வாஸினி

பிராணிகளுடைய ஹிருதயத்தில் ரேகை போல படித்து பிராண சக்தியைத் தந்து இதயமாம் குகையில் வசிப்பதால் "ஹ்ருல்லேகா" எனப்படுகிறது.

புவனேஸ்வரி பீஜத்திலிருந்து தான் சகல புவனங்களும் ஏற்பட்டிருக்கிறது. அதனால்தான் அம்பிகைக்கு புவனேஸ்வரி என்ற பெயர் ஏற்பட்டது.

ஹரி என்றால் லஜ்ஜை, வெட்கம் என்று பொருள். அதை செய்பவள் ஹ்ரீம்காரி, உயர்ந்த மக்கள் மட்டமான காரியத்தை செய்ய நேர்ந்தால் ஏற்படும் வெட்கம். இது சிறந்த ஆத்ம குணங்

களுள் ஒன்று. ஒரு தேவதையாகவும் கூறப்பட்டுள்ளது. ஹ்ரீ: சதே லக்ஷ்மி சதே பத்னி யௌ: (பகவானின் பத்னி என்று வேதத்தில் கூறப்பட்டுள்ளது.)

அம்பிகை லஜ்ஜா ரூபமாக இருந்துக் கொண்டிருப்பதாக,
யா தேவி ஸர்வ பூதேஷு லஜ்ஜா ரூபேண சம்ஸ்திதா
என்று தேவி மகாத்மியத்தில் கூறப்பட்டுள்ளது.

சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் செய்வதால் "ஹ்ரீம்காரி"' என்ற பெயர் வந்ததென்று ஸ்வதந்திர தந்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

இந்த ஹ்ரீம் மந்திரம் ஒரே எழுத்து ரூபமானதால் "ஏகாக்ஷரி" என்ற பெயர் பெற்றது.

## ஹ்ருல்லேகா மந்திரம்

"ஹ" எனப்படும் ஆகாசத்தால் பிரகாசிப்பவள். "ர" என்ற அக்னியால் அனைத்தையும் உட்கொள்பவள். ஹ, ர என்ற இரு தத்துவங்களின் சாரமான "ஈ" என்ற தத்துவத்தை பிந்துவினால் விளங்கச் செய்பவள் என்ற காரணத்தால் "ஹ்ரீம்" என்ற ஹ்ருல் லேகா மந்திரத்தின் பொருளாக இருப்பவள் அம்பிகை.

ஹ, ர, ஈ, பிந்து, அர்த்த சந்திரன், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமனா, உன்மனா என்ற 12-ன் கூட்டமே ஹ்ருல்லேகையின் ஸ்வரூபம். இதை விளக்கும் வரிவஸ்யா ரகஸ்யம் சுலோகம்:

ஹ்ருல்லேகாயா: ஸ்வரூபம்
துவ்யோமாக்னிர் வாம லோசனம் |
பிந்த்வர்த சந்த் ரோதின்ய : நாத நாதாந்த சக்தய: ||
வ்யாபிகா ஸ மனோன்மன்ய இதி த்வாதச ஸம்ஹதி: ||

## ஸ்ரீ வித்யையின் ரத்னம்

ஸ்ரீ வித்யா உபாசகர்களுக்கு "ஹ்ரீம்" மிகவும் அறிமுகமானதே. ஸ்ரீ வித்யையின் சிரஸ்ஸில் "ஹ்ரீம்" சூடாமணி போல விளங்கு கிறது. ஹ்ரீம்காரமே அக்னி குண்டம். இது தக்ஷிணாக்னி கார்ஹபத்யம், ஆகவனீயம் என்று மூன்று அக்னி ஸ்வரூபமானது. இவ்வக்னி குண்டமாகிய ஹ்ரீம் காரத்தின் ஜ்வாலா ரூபமாக விளங்குபவள் பரதேவதை (ஜ்வாலையோடு பிரகாசிக்கும் அக்னி யில் தான்ஹோமம் செய்யவேண்டும்.)

அம்பிகையின் "ஹ்ரீம்"கார மந்திரப் பெருமை "லலிதா திரிசதி"யில் பல நாமாக்கள் இந்த மந்திரத்துடன் இணைந்துள்ளதிலிருந்து அறியலாம்.

வேத காரண ஹ்ரீம்காரத்திற்கு ஆதியாக விளங்குபவள் அம்பிகை. ஹ்ரீம்காரமே சந்திரன். எப்படி சந்திரனிடம் பிரவகிக்கும் அம்ருத கிரணங்கள் எல்லா உலகுகளுக்கும் பிராணாதாரமாக விளங்குகின்றனவோ அப்படியே அம்பிகை அம்ருத ஸ்வரூப மோட்சத்தைக் கொடுக்கிறாள்.

இந்த "ஹ்ரீம்"மிலுள்ள "ஹ" வெளுப்பு நிறம், "ர" சிவப்பு நிறம், "ஈ" நீலநிறம், ஆகவே இது ஸத்துவ, ரஜஸ், தமோ குணங்களாக இருக்கிறது. ஆகவே அம்பிகை திரிகுணாத்மிக வடிவினள். "ஹ்ரீம்" பஞ்சரப்பிரணவங்களில் ஒன்று. ஆகவே ஓங்காரம் போலவே அதுவும் பிரும்மோபாஸனைக்குக் காரணமாகிறது. ஓங்காரத்தி லும் ஹ்ரீம் காரத்திலும் நிர்க்குண பரஸ்வரூபமும் ஸகுண அபரஸ்வரூபமும் உண்டு. இது யோக வேத மார்க்கங்களின் ரகஸ்யமாகும்.

அம்பிகை ஹ்ரீம்காரமாகும் கிழங்கிற்கு முளை போன்றவள் என்பது ஹ்ரீங்கார சந்தரங்குரிஜாயை என்ற திரிசதி நாமாவின் அர்த்தம். முளையானது கிழங்கு விதை முதலியவற்றுள்ள உத் பாதக சக்தியை மறைக்காமல் மரத்தின் அடிமரம், கிளை, இலை, புஷ்பம், காய், பழம் முதலியவற்றின் வளர்ச்சிக்குத்தானே காரணமாகிறது. இது போலவே "ஹ்ரீம்"கார கிழங்கு சிவசக்தி களின் ஸாமரஸ்ய "காமகலா" ஸ்வரூபமாகும். முளையின் ஒரு பாகம் மேல் நோக்கி வளர்ந்து மரமாகிறது. மற்றொரு பாகம் கீழ்நோக்கி பூமிக்குள் வளர்ந்து வேர் என்ற பெயரைப் பெறுகிறது. இந்த வேர்தான் மரத்தின் பாதுகாப்புக்கும் வளர்ச்சிக்கும் ஆதாரமாகும். இதுதான் "ஹ்ரீம்" காரக் கிழங்கின் லட்சியார்த்தம்.

இந்த "ஹ்ரீம்" காரம் ஒன்றிற்கே தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற புருஷார்த்தங்களை அடைவிக்கச் செய்யும் வல்லமை உண்டு.

ஹ்ரீம்காரமாகிற மேகத்திற்கு மின்னற்கொடி போன்றவள் பரதேவதை. மேகங்களில் மின்னற்கொடி மறைவாக இருந்து அம்மேகங்களை பிரகாசிப்பித்து மழை பெய்யும்படி செய்து அதனால் பயிர் பச்சைகள் செழிக்கச் செய்கின்றனவோ அது போலவே அம்பிகை ஹ்ரீம்கார மேகத்தில் அந்தர்யாமி வடிவ

மின்னல் போல இருந்து உபாசகர்களுக்கும் புருஷார்த்தங்களை அளிக்கிறாள்.

ஹ்ரீம்காரம் என்ற தடாகத்தில் வசிக்கும் அன்னபட்சியே அம்பிகை, ஹ்ரீம்காரமாகும் உத்யான வனத்தில் மயிலாகவும் இருக்கிறாள். ஹ்ரீம்காரமாகிய வேதத்திற்கு உபநிஷத்தைப் போன்றவள்.

அம்பிகை ஹ்ரீம்காரமாகும் மந்திரத்தின் சர்வ ஐஸ்வரியமாக இருப்பவள். ஸ்வம் என்றால் உடைமை அல்லது சொத்து. இந்த ஸம்பத்து அணிமாதி அஷ்ட ஐசுவரியங்களாகும்.

ஆதிசங்கரர் ஸ்ரீ புவனேஸ்வரி தேவியின் மூல மந்திரத்தின் பெருமையைக் கூறும் "கல்யாண விருஷ்டி ஸ்தவம்" என்ற ஸ்தோத்திரத்தில் விவரிக்கிறார்.

ஹ்ரீம் ஹ்ரீமிதி ப்ரதிதினம் ஜபதாம் தவாக்யாம்
கிம் நாம துர்லபமிஹ திரிபுராதி வாஸே
மாலா கிரீட மதவாரணமாந நீயா
தான் ஸேவதே வஸுமதீ ஸ்வயமேவ லக்ஷ்மீ: ||

ஸ்தூல ஸூக்ஷ்ம காரணம் என்ற இம்மூன்று சரீரத்தில் வசிக்கின்ற தாயே! தங்கள் மந்திரமான "ஹ்ரீம்" மை ஜபிப்பவர் களுக்கு இவ்வுலகில் அடைய முடியாதது என்ன இருக்கிறது? அப் பேர் பட்டவர்களுக்கு லக்ஷ்மி கடாக்ஷம் என்றும் இருக்குமே!

ஹ்ரீம்கார மேவ தவநாம க்ருணந்தி வேதா:
மாதஸ் திரிகோண நிலயே திரிபுரே த்ரிநேத்ரே
த்வத் ஸம்ஸ்ருதெள யம படாபிபவம் விஹாய
தீவ்யந்தி நந்தன வநே வஹ லோகபாலை ||

ஸ்ரீ புவனேஸ்வரி மந்திரமான ஹரீம்தங்கள் பெயரே என்று வேதங்கள் கூறுகின்றன. திரிகோணத்திலிருப்பவளும். திரிபுரையும், ஜாக்ரத் ஸவப்ன ஸுஷுப்தி நிலைகளில் சாக்ஷியாக இருப்பவளு மான அம்பிகே தங்களை நினைத்த மாத்திரத்தில் யமபடர் களிடம் சிக்காமல் இருக்க வழி ஏற்பட்டுவிடும்.

ஸ்ரீ புவனேஸ்வரி மந்திரத்தை ஜபிப்பவன் பல நன்மைகளை அடைவான் என்பதை பிங்கள மதம், என்னும் கிரந்தத்தில் கூறப்படுகிறது. அதில் மேலும் கூறப்பட்டுள்ளதாவது:

இம்மந்திரத்தை ஜபிப்பவன் சித்த புருஷனாகவும், உலகில் பிரசித்தி பெற்றவனாகவும், தேஜஸ்வியாகவும், தியாகம் செய்கிறவனாகவும், யோக சக்தி வாய்ந்தவனாகவும், இந்திரிய ஜயமுள்ளவனாகவும், யாவற்றையும் அறிந்தவனாகவும், நல்ல பாக்கியமுள்ளவனாகவும், ஸ்ரீ ஸம்ருத்தியை அடைந்தவகாகவும், வியாதியற்றவனாகவும் பிரியமாகக் காணப்படுகிறவனாகவும் விளங்குவான்.

திருடர்கள் முதலானவர்களாலும் பூதப்ரேத பிசாசம் முதலியவர்களாலும் பயமானது இம்மந்திரத்தை ஜபித்து சித்தியடைந்தவனுக்கு ஏற்படாது. இதைக்கூறும் ஸ்லோகம்:

ஸித்த: ப்ரஸித்த: தேஜஸ்வீ த்யாகீ, யோகீ, ஜிதேந்திரிய: ||
ஸர்வக்ஞ: ஸுபக: ஸ்ரீ மான் நிராதி: ப்ரிய தர்சன: ||
சௌராதி ச்யாள வேதாள குஹ்ய கவ்யந்தராந்தரை: ||
ந பயம் ஜாயதே தஸ்ய ஸித்த மந்த்ரஸ்ய தேஹின: ||
க்ராமே வா நகரே வாபி ஸபாயாம் ராஜ ஸந்நிதௌ ||
ப்ரஸித்த: பூஜ்யதே ஸத்பி: லபதே வாஞ்சிதம் ஹிதம் ||

---

## பக்தனுக்கு கடனாளியாகும் அம்பிகை

ஐசுவரியம், பேரறிவு, பராக்கிரமம், தயை இது போன்ற குணங்களெல்லாம் புவனேஸ்வரியிடம் நிலைகொண்டு நிற்கின்றன. அவைகளை பக்தர்களுக்கு வழங்கவும் அவளே திறனுள்ளவள். அநேக கோடி பிரமாண்டங்களுக்கு நாயகியாகிய புவனேஸ்வரியே ஸ்வதந்திரை. அவளை வழிபடும் பக்தர்களுக்கு கிடைக்காதது என்று உலகத்தில் ஒன்றுமில்லை.

"புவனேசீ" என்ற சொல் ஒரு பக்தனின் வாயிலிருந்து வெளிப் பட்ட உடனேயே மூவுலகத்தையும் கருணைபொழி புவனேசீ கொடுத்து விடுகிறாள். பின் கேட்கும் வரத்திற்கு கொடுக்க ஒன்றில்லாமல் பக்தனுக்கு கடனாளியாகி விடுகின்றாள் என்று அவள் அவ்யாஜ கருணையை நினைவுபடுத்துகின்றார் வியாசாசாரியார்.

---

# புவனேஸ்வரி சந்நிதிகள் 6

புதுக்கோட்டை அதிஷ்டான புவனேஸ்வரி பற்றி "அருள் சுரக்கும் அதிஷ்டானம்" என்ற இடத்தில் விவரமாகக் கூறப் பட்டுள்ளது. இதே புதுக்கோட்டையின் மேற்கு பக்கத்தில் கோவில் கொண்டுள்ளவள் பிருஹதாம்பாள். ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரர் இத்தேவியை தன் இஷ்ட தெய்வமாகக் கொண்டு உபாசித்தவர்.

## பாபநாசம் லோக நாயகி

தாமிரவருணி நதிக்கரையிலேயே ஆலயம். நதியின் சலசலப்பு அமைதியான சூழ்நிலையில் கோயில் கொண்டிருக்கிறாள் லோக நாயகி. இந்த அம்பிகையின் அருளைப் பூரணமாகப் பெற்றவர் நமசிவாயர் என்ற ஓர் அடியார். இவருக்கு வெற்றிலையை அதிக மாகப் போட்டு சுவைக்கும் வழக்கம் உண்டு. ஒருநாள் அம்பிகை யைத் தியானித்துக்கொண்டு அவளைப் பாடிக்கொண்டே வெற்றிலை எச்சிலை துப்பிய வண்ணம் போய்க்கொண்டிருந்தார். யாரோ பின்னால் வருவதாகத் தோன்றவே நின்று திரும்பிப் பார்த்து யாரும் இல்லாமை கண்டு வீடு திரும்பினார்.

மறுநாள் ஆலயத்தை திறந்தபோது அம்பிகை உடை மீது தாம்பூல எச்சிலைக் கண்டு குருக்கள் திடுக்கிட்டார். அன்று அரசன் அங்கு வந்தபோது குருக்கள் இதை அவனிடம் தெரிவித் தார். அவன் மனதும் வேதனையடைந்தது. அன்று இரவில் அவன் கனவில் அம்பிகை தோன்றி நடந்ததைக் கூறி நமசிவாயரை ஆதரித்துப் போற்றும்படி சிபாரிசு செய்தாள்.

அரசன்முன் நமசிவாயம் கொண்டுவந்து நிறுத்தப்பட்டார். "நேற்று உலகம்மையின் உடலில் எச்சிலைத் துப்பியதற்காக உமக்கு தண்டனை விதிக்க விருக்கிறேன்" என்று அரசன் அதட்டினான். "இதென்ன அநியாயம், என் ஆளுடை அம்மை மீது நான் எச்சில் துப்புவேனா?" என்று நமசிவாயம் பதறிப்போய்விட்டார். "இத்தவறை நீங்கள் செய்யவில்லை என்பதை மெய்ப்பிக்க வேண்டும்" என்றான் அரசன். "அதற்கு நான் என்ன செய்யவேண்டும்?" என்று நமசிவாயர் கேட்டார்.

அரசன் ஒரு பூச்செண்டை அம்பிகையின் கரத்தில் வைத்து தங்க நூலால் அதை கட்டிவிட்டு "நீர் அம்பிகையின் மீது பாடவேண்டும். ஒவ்வொரு பாட்டு முடிந்ததும் அம்பிகையின் அருளால் தங்க நூல் ஒவ்வொன்றாக அறுபடும், கடைசிப் பாட்டு முடிந்ததும் பூச்செண்டு அம்பிகையின் காலில் விழும், பாடுங்கள்" என்றான் அரசன்.

என்றைக்கும் துணை நீ அம்மா ! என்
ஆவி இறந்திடும் அன்றைக்கும்
ஓடி வந்து அஞ்சலென்பாய்.

என்று தொடங்கிப் பாட ஆரம்பித்தார் நமசிவாயர். பூச் செண்டும் ஒவ்வொரு தங்க கம்பிகளாக அருந்து அம்பிகையின் பாதார விந்தத்தில் விழுந்தது.

## உத்கலம் புவனேஸ்வரி

உத்கலம் என்பது இப்போதுள்ள ஒரிஸா மாநிலம். அங்கு புவனேஸ்வரம் என்றே அம்பிகையின் பேரில் ஒரு நகரம் இருக்கிறது. இங்கு அம்பிகை கோபாலினியாக, அதாவது பசுக்களை மேய்ப்பவளாக விளங்குகிறாள். சைவ சித்தாந்தத்தில் "பசு" என்பது ஜீவன்களையே குறிக்கும். அந்த ஜீவன்களை ஆட்டிப் படைக்கும் புவனேஸ்வரியாக விளங்குபவள் அம்பிகை. காவியங்கண்ட கணபதி இந்த அம்பிகையை,

கோபாலினீ வேஷப்ருதம் பஜஸ்வ லீலா ஸகீம்
தாம் புவனேஸ்வரஸ்ய இஷ்டம் ஹ்ருதி ஸ்தம்
தவ ஹஸ்தகம் ஸ்யாத் கஷ்டம்
ச ஸம்ஸார பவம் ந பூப:

என்று துதிக்கிறார்.

## அகிலாண்டேஸ்வரி அன்னை

அகில அண்டங்களுக்கும் ஈஸ்வரியாக விளங்குபவள் திருவானைக் காவலில் அகிலாண்டேஸ்வரி என்ற பெயரில் நின்ற வண்ணம் அருள் பாலிக்கிறாள். அண்டம் என்பது இப்புவனத்திற்கும். கோழி முட்டைக்கும் பெயர் உண்டு. கோழி முட்டைக்குள் இருக்கும் குஞ்சு முட்டையிலிருந்து வெளிவர ஒரு சக்தி வேண்டும். இந்த சக்தி உலகத்தை உண்டு பண்ணி காத்து அழிக்கவும் செய்கிறது. அந்த சக்தியே அம்பிகை அகிலாண்டேஸ்வரி.

அஷ்ட சித்தி நல் அன்பருக்கு அருள
விருது கட்டிய பொன் அன்னமே
அண்ட கோடி புகழ் காவை வாழும்
அகிலாண்ட நாயகி என் அம்மையே

என்ற இத்தேவியைக் குறித்து மகான் தாயுமானவர் பாடியிருக்கிறார். அஸ்ஸாம் காமாக்யா ஆலயத்திலிருந்து சிறிது தூரத்தில் புவனேஸ்வரி தேவியின் ஆலயம் இருக்கிறது. நீலமலைத் தொடரும் பசுமையான செடி கொடி மரம் சூழ்நிலையும் பிரும்ம புத்திராவின் அகண்ட நீர் பெருக்கும் ஆனந்தமளிக்கும் காட்சிகள்.

சிருங்கேரி சாரதா ஆலயத்தில் புவனேஸ்வரி தேவியிருக்கிறாள்.
அம்பத்தூரில் புவனேஸ்வரி ஆலயம் உள்ளது.

தேவி புவனேஸ்வரியின் அருள் கிடைக்க ஸத்குருவின் அருள் அவசியம் ஆகவே புவனேஸ்வரி அதிஷ்டானம் சம்பந்தப்பட்ட ஸத்குருநாதர்களைப் பற்றி தெரிந்துக் கொள்வோம்.

# அதிஷ்டான ஆசார்யர்கள் 7

ஸித்தே நுகம் பாமகரந்த பூர்ணே
ஜகத்குரோ: பாத ஸஹஸ்ரபத்தே ।
கிமந்யதோ தாவதி சித்தம்ருங்க
ப்ரயாஹி தத்ரைவ நமஸ்வ நித்யம் ॥

– சிருங்கேரி, ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதி சுவாமிகள்.

“தயை என்ற மகரந்தம் நிறைந்த ஜகத்குரு பாத கமலம் இருக்கும் போது மனமாகிய வண்டே ஏன் எங்கெல்லாமோ திரிகிறாய்? அம்மலருக்குச் சென்று ஆனந்தத்தை அனுபவி”

ஸாதுக்களான மகான்கள் உலகத்தின் நன்மைக்காகவே வசிக்கிறார்கள். எவ்விதப் பிரதி பிரயோஜனமுமின்றி சம்சாரக் கடலைத் தாண்ட நமக்கு வழிகாட்டுகிறார்கள். ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டவர்களே அவ்வாறு நமக்கு வழி காட்ட முடியும். அவர்கள் மறைந்து சமாதிக்குள் அடக்கமாகியிருந்தாலும் அதே சக்தியை எப்போதும் உடையவர்கள்.

நிற்குணமான இறைவனை ஸத்குரு ரூபமாக தியானம் செய்வது ஸகுணோபாசனை, சிவன், விஷ்ணு. அம்பிகை இவர்களை குரு ரூபமாக பார்ப்பது பக்தி மார்க்கத்தில் மிக சுலபமான வழி ஈஸ்வரனை குரு ரூபத்தில் தியானிப்பது போல நாம் அடையும் ஸத்குருவை ஈஸ்வரனாகப் பாவித்தால் அதுவே நமக்கு மோக்ஷத்திற்கு வழி காட்டும்.

## குருபாதுகா பஞ்சகம்

1. ப்ரம்மரந்த்ர ஸரஸீரு ஹோதரே
நித்ய லக்னமவதாத மத்புதம் ।
குண்டலீ விவர காண்ட மண்டிதம்
த்வாதஸார்ண ஸரஸீருஹம் பஜே ॥

2. தஸ்ய கந்த வித கர்ணிகா புடே
க்லுப்த ரேக மகதாதி ரேகயா ।

கோண லக்ஷித ஹலக்ஷ மண்டலீ
பாவ லக்ஷ்ய மபலாலயம் பஜே ||

3. தத்புடே படு தடித் கடாரிம
ஸ்பர்தமான மணி பாடல ப்ரபம் |
சிந்தயாமி ஹ்ருதி சின்மயம் வபுஹு:
நாத பிந்து மணி பீட மண்டலம் ||

4. ஊர்த்வ மஸ்ய ஹுத புக்ஸி காத்ரயம்
தத்விலாஸபரி ப்ரம்மணா ஸ்பதம் |
விஸ்வ கஸ்மர மஹோச்சி தோத்கடம்
வ்யாம்ருஸாமி யுக மாதி ஹம்ஸ யோஹு ||

5. தத்ர நாத சரணார விந்த யோஹு
குங்குமா ஸவ பரீமரந்த யோஹு |
த்வந்தமிந்து மகரந்த ஷீதலம்
மானஸம் ஸ்மரதி மங்களா ஸ்பதம் ||

6. நிஷக்த மணி பாதுகா நியமிதாக கோலாஹலம்
ஸ்புரத் கிஸ லாயாருணம் நகஸமுல்ல ஸச்சந்ரகம் |
பராம்ருத ஸரோவரோதித ஸரோஜ ஸத்ரோ சிஷம்
பஜாமி சிரஸி ஸ்திதம் குரு பாதாரவிந்த த்வயம் ||

7. பாதுகா பஞ்சக ஸ்தோத்ரம்
பஞ்ச வக்த்ராத் வினிர்கதம் |
ஷடாம்நாய பலப் ராப்தம்
ப்ரபஞ் சே சாதி துர்லபம் ||

ஓம் தத் ஸத்

## ஸ்ரீ தத்தாத்ரேயர் *

மும்மூர்த்திகளின் ஸ்வரூபமான தத்தாத்ரேயர் அத்திரி மகரிஷிக்கும் மகா பதிவ்ரதை என்று போற்றப்பட்டவளுமான அனுசூயைக்கும் பிறந்தவர்.

இவளுடைய பதிவிரதா சிறப்பு பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி என்ற மூன்று தேவிகளுக்கும் எட்டியது. இவர்கள் தங்கள் கணவன்மார்களான சிவன், விஷ்ணு, பிரும்மா மூவரையும் அவள்

*தத்தாத்ரேயர் பற்றிய முழு விவரங்களை பிரதிபாவின் "ஸ்ரீ தத்தாத்ரேயர் விஜயம்" நூலில் காணலாம்.

கற்பை சோதிக்க அனுப்பினர். இம் மூவரும் ரிஷிகள் தோற்றத்துடன், அத்திரி மகரிஷி வீட்டில் இல்லாத வேளையில் பிக்ஷை கோரி வந்தனர். அனுசூயை அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரிக்கலானாள். உணவருந்த அழைத்தபோது தங்களுக்கு நிர்வாணமாகத்தான் பிக்ஷையிட வேண்டும் என்றனர்.

"ஓ அதற்கேன்ன அப்படியே செய்கிறேன்" என்று அனுசூயை நீரை அவர்கள் மீது தெளிக்க மூவரும் குழந்தைகளாக மாறி விட்டனர். அவர்கள் கோரியபடியே அனுசூயை ஆடையைக் களைந்துவிட்டு பாலன்னத்தை அம்மூவருக்கும் ஊட்டினாள்.

பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி மூன்று பேர்கள் தம் கணவன் மார்கள் திரும்பிவராதது கண்டு கவலையுற்று அனுசூயையைத் தேடி வந்தனர்.

தன் கணவன்மார்களை மீண்டும் பெற அவர்கள் தவம் இருப்பதை சுசீந்திரம் ஆலயத்தில் காணலாம்.



இம்மூன்று குழந்தைகளையும் சேர்த்து எடுத்தபோது மூன்று தலையும் ஒருடலுமான தத்தாத்ரேயராக மும்மூர்த்திகளும் விளங்கினர். மும்மூர்த்திகளும் தனக்கு குழந்தையாக வரவேண்டும் என்கிற அத்திரி மகரிஷியின் ஆசையும் நிறைவேறியது.

தத்தாத்ரேயர் ஆடையின்றி அவதூதராக இருப்பதற்கும் இந்த வரலாற்றுக்கும் தொடர்பு இருக்கலாம். இவர் வித்வத் ஸந்யாஸமாகிய ஸ்ரீ அவதூத பரம்பரைக்கு மூலகாரண புருஷராவர்.

அசுரர்கள் கொடுமை தாங்க முடியாமல் தேவேந்திரன் இவரிடம் வந்து சரணமடைந்தான். அசுரர்களை சண்டைக்கு அழைத்து என் எதிரில் வரும்படிச் செய் என்று தத்தாத்திரேயர் கூறினார். அதன்படியே அசுரர்களை சண்டைக்கு அழைத்து அவர்களுக்குப் பயந்து ஓடுவது போல தத்தாத்திரேயர் ஆசிரமத்திற்குள் தேவேந்திரன் நுழைந்தான். அசுரர்களும் அவனைத் துரத்திக் கொண்டு வந்தனர்.

தத்தாத்திரேயர் பக்கத்தில் ஒரு அழகிய யுவதி இருப்பதைக் கண்ட அசுரர்கள் தேவேந்திரனை விட்டு விட்டு அவளைத் தூக்கிக் கொண்டு போக ஆரம்பித்தனர்.

தேவேந்திரன் தனக்காக அப்பெண் அசுரர்களிடம் அகப் பட்டுக் கொண்டாளே என்று கவலை தெரிவித்தான்.

தத்தாத்ரேயர் சிரித்து விட்டு அவள் மகாலக்ஷ்மி, இவர்கள் அவளுடன் ஏழடி நடக்குமுன் அவள் மறைந்து விடுவாள். அத் துடன் அசுரர்களின் வல்லமையும் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். பின்னர் தேவேந்திரன் அசுரர்களை வென்று வெற்றி பெற்றான்.

கார்த்த வீரியார்ஜுனன் என்பவன் தத்தாத்திரேயரைக் குருவாக அடைந்து சகல நலன்களும் பெற்றான்.

## அவதூத பரம்பரை

அவதூதர்கள் அனைவரும் தத்தாத்ரேயர் பரம்பரையில் வந்தவர்களே, சந்நியாசிகளில் பஹூதகர், குடீசகர், ஹம்ஸர், பரமஹம்சர் என்ற நான்கு பிரிவுகளுண்டு. இவர்களில் பரம ஹம்ஸர்களே மிகச் சிறந்தவர்கள் இவர்களுக்கு மேற்பட்டவர் களாக அவதூதர்கள் மதிக்கப்படுகின்றனர். அவதூதர்களைத் துரியாதீதர்கள் என்றும் குறிப்பிடுவது உண்டு.

குழந்தைகள் பிறந்த மேனியாக இருக்கின்றன. அவை பரப் பிரும்மம். அதே போல அவதூதர்களும் பரப்பிரும்மம், சுகரும் அவதூதர்தான். அவர் கங்கைக் கரை வழியே சென்றபோது நீரில் குளித்துக் கொண்டிருந்த பெண்மணிகள் தாங்கள் பாட்டுக்கு ஸ்நானம் செய்து கொண்டிருந்தனர். அவரைக் கூப்பிட்டுக்கொண்டே வந்த வியாசர் அவ்வழியே வந்ததும் அப் பெண்மணிகள் அவசரமாக ஓடி ஆடையை அணிந்தனர். வியாசருக்கு சுருக்கென்றது. "என் மகன் நிர்வாணமாகப் போகிறான். அப்போது வெட்கப்படாத நீங்கள் என்னைக் கண்டு இப்படி நடந்துக் கொள்வானேன்" என்று கேட்டே விட்டார். "நீங்கள் இப்படி கேட்டதிலேயே உங்கள் கேள்விக்குப் பதில் இருக்கிறது" என்று அப்பெண்மணிகள் பதில் கூறினர்.

ஆலமரம் போன்று தழைத்த இந்த பரம்பரையில் வந்தவர் களே மாபெரும் ஞானிகள். இந்த அவதூத நிலை தானாக ஏற்படுத்திக் கொள்வதில்லை. இந்த பரப்பிரும்ம நிலை ஏற்பட்டால் உடம்பில் வஸ்திரம் இருக்கிறதா, இல்லையா என்பது கூடத் தெரியாது. இந்நிலையையே உபநிஷத் "யாஜாதன்" எனக்கூறுகிறது.

இம்மாதிரி அவதூதர்களாக விளங்கிய பிரும்ம ஞானி ஸ்ரீ சதாசிவ பிரும்மம். இவர் காமகோடி பீடாதிபதி ஒருவரின் சிஷ்யர். நம் மனதிலுள்ள அஞ்ஞானம் விலகினால் துக்கங்கள் விலகி விடும். ஒருவனுடைய துக்கங்கள் விலகும்போது அவன் ஈஸ்வரனு க்கு சமமாகி விடுகிறான். துக்கத்தைப் போக்கும் சக்தி ஈஸ்வரன் அம்சம் கொண்ட ஆசாரியனுக்கே உண்டு. பகவான் கூட அம்மாதிரி சக்தி தனக்கு இருப்பதாக ஒப்புக்கொள்வதில்லை. இம்மாதிரி நம் துயரத்தை நீக்க வந்த ஆசாரிய புருஷனே தத்தாத்ரேயர்.

ஒரு சமயம் அவரிடம் நீங்கள் எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்க காரணமென்ன என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர் அளித்தபதில், "நல்ல சற்குருவை அடைந்து அவர்களிடமிருந்து உபதேசம் பெற்றிருக்கிறேன். அதனால் தான் சந்தோஷமாக இருக்கிறேன். பூமி, வாயு, ஆகாசம், ஜலம், அக்னி, சந்திரன், சூரியன், மற்றும் பிராணிகள், பட்சிகள், விட்டில் பூச்சி போன்ற 24 பேர்கள் எனது ஆசாரியர்கள். அவர்களும் நேராக வாக்கினால் எனக்கு உபதேசிக்கவில்லை. அவர்களிடமுள்ள குணங்களைக் கண்டு உபதேசங்களைப் பெற்றேன்."

## குரு தத்தாத்ரேய பஞ்சரத்னம்

(ஆதிசங்கரரின் சிஷ்யர் ஸ்ரீ வாசுதேவானந்த யதீந்திரர் இயற்றியது)

ஸ்ரீ பாத ஸ்ரீவல்லப த்வம் ஸ்ரித சரண ஜநத் ராணதே பத்ததிக்ஷ
ஸ்ரீ சேஷ பிரஹ்ம மூர்த்தே ஸகல ஜ ந ம ந: க்லேஸ நாஸே
ப்ரபுக்த | பாவ க்ராஹய க்லேஸ ஹாரிந் ஸுகீர்த்தே
கோ ராத் கஷ்டாதுத்த ராஸ்மாந் நமஸ்தே || 1

(பிரும்ம விஷ்ணு சிவஸ்ரூபியாகிய உமக்கு நமஸ்காரம்)

த்வம் நோ மாதா த்வம் பிதாப் தோதி பஸ்த்வம்
த்ராதா யோக க்ஷேம க்ருத் ஸத் குருஸ்த்வம் |
த்வம் ஸர்வ ஸ்வம் நோ ப்ரபோ விச்வ மூர்த்தே
கோராத் கஷ்டாதுத்த ராஸ்மாந் நமஸ்துதே || 2

(அன்னையும் பிதாவும், நண்பனும், நாயகனும் நீங்களே. சத்குரு நீங்களே. கஷ்டங்களிலிருந்து எங்களைக் கைதூக்கிவிட வேண்டும்.)

நாந்யஸ் த்ராதா நாபி தாதா ந பர்த்தா
த்வத்தோ தேவ த்வம் ஸரண்யோக ஹர்த்தா |
குர்வாத் ரேயாநுக்ரஹம் பூர்ணராதே
கோராத் கஷ்டாதுத்த ராஸ்மாந் நமஸ்தே || 3

(ஸ்வயம்பிரகாச பூர்ணானந்த ஸ்வரூபியே ஜயத்தைக் கொடுத்து காப்பாற்ற வேண்டும்).

பாபம் தாபம் வ்யாதி மாதிம் ச தைர்யம்
பீதிம் கிலேசம் த்வம் ஹராஸு த்வதன்யம்
த்ராதாரம் நோ வீக்ஷ ஈசாஸ்த ஜனார்த்தே
கோராத் கஷ்டாதுத்தராஸ்மாந் நமஸ்தே || 4

(பாவத்தையும் தாபத்தையும் ரோகங்களையும் மனக்கவலையையும் ஏழ்மையையும் சத்ரு பயத்தையும் துக்கத்தையும் நீக்க வேண்டும்.)

தர்மே ப்ரீதிம் ஸந்மதிம் தேவ பக்திம்
ஸத்ஸங்காப்திம் தேஹி முக்திம் ச பக்திம் |
பாவா ஸக்திம் சாகிலானந்த மூர்தே
கோராத் கஷ்டாதுத்த ராஸ்மாந் நமஸ்தே || 5

(தர்மத்தில் பரீதியையும், சன்மார்க்கத்தில் புத்தியையும், தெய்வ நம்பிக்கையையும் ஸாது ஜன சேர்க்கையும் பக்தி முக்திகளையும் கொடுத்து அனுக்கிரகிக்க வேண்டும்.)

ஸ லோக பஞ்சக மேதத் யோ லோக மங்கள வர்த்ததம்
ப்ர படேந் நியதோ பகத்யா ஸ ஸ்ரீ தத்தப்பிரியோ பவேத் || 6

## ரிஷப தேவர்

தத்தாத்ரேயர் போல அவதூதராக விளங்கியர் ரிஷப தேவர். இவரை ஜைன முனிவர்கள் பின்பற்றி திகம்பரர்களாக விளங்கினார்கள். தேவ நெறியும், ஜைனர்களின் ஒழுக்க நெறியும் ஒரே மூலத்திலிருந்து வந்தவையே.

பக்தியே உயர்ந்தது என்று காட்டும் நூல் ஸ்ரீமத் பாகவதம். அதன் ஒவ்வொரு ஸ்கந்தத்திலும் பிரும்ம தத்துவத்தையும் ஆத்ம தத்துவத்தையும் காணலாம். அத்தகைய உயரிய நூலில் ரிஷபோக்யானம் ஒரு மாணிக்கம் போல பிரகாசிக்கிறது.

ரிஷப தேவர் சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனின் அவதாரம். ரிஷபர் என்ற சொல்லுக்கு சிரேஷ்டர் என்று பொருள். சிரேஷ்டமான அவதூத சந்நியாச ஆசிரம தர்மத்தைக் கடைப்பிடித்துக் காட்ட அவதரித்ததால் அவருக்கு அந்தப் பெயர் வந்தது.

ரிஷப தேவர் ஆளும் காலத்தில் மழையே பெய்யவில்லை. இவர் தன் யோக பலத்தால் மழை பெய்யச் செய்தார்.

நீண்ட காலம் ராஜ்ய பாரம் செய்த பின் ரிஷப தேவர் தன் பிள்ளைகளை அழைத்து தான் ஒரு அவ தூத சன்னியாசி ஆகிவிடப் போவதாக அறிவித்தார்.

அப்போது அவர் உபதேசித்தது. "பகவானை ஆராதிப்பதற்காகவே இந்த சரீரம் இருக்கிறது. அந்த ஆராதனையினால் சித்த சுத்தி ஏற்படும். ஜனன மரண பந்தத்திலிருந்தும் விமுக்தி கிடைக்கும்."

"தர்மத்தை பின்பற்ற என்ன நூல்களைப் படிக்கவேண்டும்." என்று அவர் பிள்ளைகள் கேட்டார்கள். அதற்கு அவர் அளித்தபதில் "நூல்களைப் படிப்பதால் மட்டும் தர்மத்தை அறிய முடியாது. மகான்களை அண்டி அவர்களுடைய பாததூளியால் உங்களை அபிஷேகம் செய்துக் கொண்டால் நீங்கள் தர்மத்தையும் அடையலாம். க்ஷேமத்தையும் அடையலாம்."

அவதூதராய் ரிஷப தேவர் உலக முழுவதும் சஞ்சாரம் செய்தார். இத்தகைய மகா ஞானிகளை நெருப்புச் சுடர் சுடமாட்டாது என்று நிரூபிக்கும் வரையில் அவருடைய உடலில் காட்டுத்தீபற்றி எறிந்தபோது அதனுடைய தாபத்தை தான் உணராமல் இருந்தார். இம்மாதிரி மகான்களே பிறர் தாபத்தையும் போக்கக் கூடியவர்கள். (ஜைனர்கள் இவரையே முதல் தீர்த்தங்கரராக வழிபடுகிறார்கள். ரிஷப தேவரின் கோவில் ஒன்று சென்னைக்கு அருகிலுள்ள புழலில் இருக்கிறது.)

## ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரர்

ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரர் என்ற பரம ஞானி சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்காவிரியாற்றங்கரையில் சஞ்சாரம் செய்தவர். இவர் பிறர் தன் கையை வாளால் துண்டித்தபோதும் உணர்வற்று ஆன்மாவில் அடங்கிய பெரியவர். இறைவன் எங்கும் பரந்தும் கரந்துமுள்ளவன் என்பதை விளக்க வந்தவர். திருவிசை நல்லூர் "அய்யாவாள்" ஸ்ரீதர வேங்கடேசர், போதேந்திர சுவாமிகள், சிவயோகி தாயுமானவர், தியாகப் பிரும்மம் இவர்கள் எல்லாம் இவர் காலத்தில் வாழ்ந்தவர்களே காமகோடி பீடாதிபதிகளில் ஒருவரான ஸ்ரீ பரம சிவேந்திரரைக் குருவாகப் பெற்றவர். இவருடைய குரு ஸ்ரீ பரமசிவேந்திரர் சமாதி திருவெண்காட்டிலுள்ளது.

அவதூத நிலையில் இருந்து ஞானாநுபூதி பெற்றவர் சதாசிவ பிரம்மேந்திரர். ஆடையின்றி திகம்பரராக உலாவியவர். உள்ளத்தில் குழந்தைத் தன்மை நிரம்பினால் தான் உடம்பும் குழந்தை போல ஆடையின்றிருக்க முடியும்.

சேய் போல் இருப்பவர் கண்டீர்
உண்மை ஞானம் தெளிந்தவரே |

மதுரையில் சோமநாத அவதானி என்பவருக்கும் பார்வதி அம்மாளுக்கும் பிறந்த இவருடைய பிள்ளைத் திருநாமம் சிவராம கிருஷ்ணன்.

அன்றே வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டார். அப்போது காமகோடி பீட ஆச்சார்யரான பரமசிவேந்திர சரஸ்வதியிடம் சரணடைந்தார். அவரிடம் உபதேசம் பெற்று முறையான துறவியானார்.

ஒரு நாள் சிஷ்யர்களிடையே தர்க்கம் நடைபெற்றது. பிறர் கூற்றை மறுத்து இவர் வாதிட்டார். இதைத் கவனித்த குருநாதர் வீண் தர்க்கத்தில் பொழுது போக்குவது அனுபவத்திற்கு தடை யாகும் என்பதை அறிந்து சிறிதே சினம் கொண்டவர்போல "சதாசிவா உன்வாய் அடைக்காதா?" என்றார்.

அந்த சொல்லை சதாசிவர் ஒரு பெரிய உபதேசமாகக் கொண்டார். அந்த நிமிஷத்திலேயே அவர் மௌனத்தை மேற்கொண்டார்.

அது முதல் அவர் பேச்சையும் உதறினார். கட்டும் ஆடையை யும் உதறினார். நாடு முழுவதுமே தன்னுடைய ஆசிரமமாக எண்ணி சஞ்சாரம் செய்யத் தொடங்கினார்.

பர்தா பெண்கள் உள்ள பகுதியில் நிர்வாணமாக இவர் சென்றதைக் கண்ட ஒரு முஸ்லீம் ஒரு வாளைக் கொண்டு இவர் கையை வெட்டி விட்டார். சரீரத்தையே மறந்திருந்த இவர் எதுவும் நடக்காதது போலவே போய்க்கொண்டிருந்தார். வெட்டுண்ட கை கீழே கிடந்தது. அவர் துடிக்கவில்லை. ஆனால் வெட்டியவர் துடித்துப்போனார். வெட்டப்பட்ட கையை எடுத்துக்கொண்டு ஓடி அவரிடம் மன்னிப்பு கேட்டார். சதாசிவர் வெட்டப்பட்ட இடத்தைப் பார்த்து மற்ற யையால் கட்டிக் காட்ட முஸ்லிம் அங்கே வெட்டிய கையை வைக்கவே அது ஒட்டிக்கொண்டதாம்.

சதாசிவ பிரும்மம் ஜானகீ பரிணயம், என்ற வடமொழி நாடகத்தை இயற்றிய ஸ்ரீ ராமபத்ர தீக்ஷிதரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். சிறந்த ஆத்ம ஞானியான இவரிடம் எவரும் எளிதில் அறிந்துக்கொள்ள இயலாத தேசப்பற்று உறுப்பெற்றிருந்தது.

இவர் பைத்தியமாக அலைகிறார் என்று சிலர் இவர் குருவி னிடம் கூறினார்கள். அவ்விதமான பைத்தியம் எனக்கு பிடிக்க வில்லையே என்று அவர் வருந்தினார்.

ஒரு சமயம் கொடுமுடி ஆற்றங்கரை மணலில் யோக நிஷ்டை யில் இருந்தார். திடீரென்று வந்த ஆற்றுவெள்ளத்தில் அமிழ்ந்து விட்டார். இதனைக் கண்டவர்கள் இம்மகானை மீட்க முயன்று முடியாமல் போகவே வருந்தினார். மூன்று மாதங்களுக்குப் பின் ஆற்று மணலைத் தோண்டும்போது இவர் வெளிப்பட்டு யாரிட மும் பேசாமல் ஏதோ ஜாடைகாட்டிவிட்டுப் போய்விட்டார்.

1730 முதல் 1764 வரை புதுக்கோட்டையை ஆண்டு வந்த சிவஞானபுரம் துரை என வழங்கும் விஜய ரகுநாத தொண்டமான் என்பவர் 1738-ல் புதுக்கோட்டைக் கருகேயுள்ள திருவரங்குளத்தின் காட்டில் ஸ்ரீ பிரும்மமேந்திரரை சந்தித்தார். இவர் சுவாமிகளை எட்டு ஆண்டு காலம் பின்தொடர்ந்து கடைசியில் சுவாமிகளின் அனுக்கிரஹத்தைப் பெற்றார்.

ஸ்ரீ சதாசிவர் அம்மன்னனுக்கு மணலில் சில மந்திரங்களை எழுதி உபதேசம் செய்து தன் சகபாடியும் பதஞ்சலி மகா பாஷ்யத்திற்கு விருத்தியுரை எழுதியவருமான ஸ்ரீ கோபால கிருஷ்ண சாஸ்திரிகளைக் குருவாக வரிக்கும்படி பணித்துச் சென்றார்.

அன்றுமுதல் தொண்டைமான் ஸ்ரீ சதாசிவரின் சிஷ்யரானார் பிக்ஷாண்டார் கோவில் ஸ்ரீ கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் அரச சபைக்கு அழைக்கப்பட்டார். அவர் விதித்தப்படி தக்ஷிணா மூர்த்திக்கு விசேஷ ஆராதனைகள் நவராத்திரியில் சிறப்பான பூஜை இவைகள் நடத்தப்பட்டன. ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரர் மந்திரம் எழுதிக்காட்டிய மணலை ஒரு பொற்பேழையில் வைத்து அதைப் போற்றி வழிபட்டு வருகின்றனர்.

தஞ்சாவூர் அரசரான ஸ்ரீ சரபோஜியும் இவரை தரிசித்து அனுக்கிரகம் பெற்றதாகவும், இவர் ஆணையை ஏற்றே அம் மன்னன் சரஸ்வதி மஹால் நூலகத்தை ஏற்படுத்தினார் என்றும் கூறப்படுகிறது. தான் சமாதியடையும் காலத்தையும் இடத்தையும் அவரே நிர்ணயித்தார். காவிரி, தக்ஷிண வாஹினியாக ஓடும் நெரூர் என்ற இடமே அவர் தேர்ந்தெடுத்தது.

ஜேஷ்ட, சுக்ல, தசமியன்று தம் பூத உடலைத் தான் நீக்கப்போவதாகவும் அன்று காசியிலிருந்து ஒரு அந்தணர் ஒரு பாணலிங்கம் கொண்டுவருவார் என்றும் அதை தன் சமாதியில் பிரதிஷ்டை செய்யவேண்டும் என்றும் தன் அருகில் இருப்பவர்களிடம் தெரிவித்தார்.

குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட நேரத்தில் சமாதி குழியை நெருங்கினார். தலை நிமிர்ந்து திரண்ட ஜனங்களைப் பார்த்தார். அப்பார்வை நிறைவையும் அமைதியையும் விளக்கும் புன்சிரிப்பு லேசாகத் தோன்றியது. குழிக்குள் இறங்கி சமாதி நிலையில் உட்கார்ந்து விட்டார் இப்பூத உடலுடன் உள்ள தொடர்பு அறுந்தது.

இச் செய்தியறிந்த தொண்டமான் அச்சமாதியில் அன்று ஓர் அந்தணர் கொண்டு வந்த பாண லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து கோயில் கட்டினார்.

புதுக்கோட்டை பிரஹதாம்பாள் கோயிலில் தக்ஷிணா மூர்த்தி சந்நிதிக்கருகில் ஸ்ரீ பிரும்மேந்திரரின் உருவச் சிலையுள்ளது.

ஸ்ரீ சிருங்ககிரி சாரதா பீடம் ஜகத்குரு ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ஹ பாரதி சுவாமிகள் நெரூருக்கு விஜயம் செய்து ஸ்ரீ பிரும்மேந்திரரை மனமுருகித்துதித்து "ஸ்ரீ சதாசிவேந்திரர் ஸ்துதி" என்ற நூல் இயற்றினார்.

ஸ்ரீ பிரும்மேந்திரர் மௌனத்தை மேற்கொண்ட போதிலும் பல அரிய நூல்களையும் இனிய கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளார்.

பிரும்ம ஸூத்திர விருத்தி என்ற நூல் மற்ற நூல்களிலும் முக்கியமானது. பிரும்ம ஸூத்திரங்களே ஆன்ம அறிவுக்கு முதல் பாடம். அவை சிறியவையே யாயினும் அவைகளுக்கு பல சமயா சாரியார்கள் தாங்கள் தங்கள் கொள்கைகளுக்கிணங்க உரைகள் எழுதியுள்ளனர். இவ்வளவு உரைகளில் இவருடையது மிக எளிமையானது. ஒவ்வொரு ஸூத்திர உரையிலும் பூர்வ பக்ஷத் தையும் சித்தாந்தத்தையும் தெளிவாக விளக்கியும் பூர்வபக்ஷ சித்தாந்தங்களின் பல பேதங்களைக் குறிப்பிட்டும் சிறப்பாக எழுதியுள்ளார்.

"யோக சுகாதாரம்" அல்லது "யோக சாஸ்திர விருத்தி" என்று ஒரு நூல் எழுதியுள்ளார். பதஞ்சலி முனிவர் எழுதிய யோக ஸூத்திரங்களுக்கு அனுபவ நிறைவுடனும் நுட்ப விளக்கங் களுடனும் அருமையாக அந்த பாஷ்யம் அமைந்துள்ளது.

ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் எழுதிய சித்தாந்த லேச சங்கிரகம் என்ற வசன நூலைச் செய்யுளில் சித்தாந்த கல்பவல்லியாக எழுதி யுள்ளார். காமகோடி பீடாதிபதிகள் வரலாற்றைக் கூறும் "குருரத்னமாலா" என்ற நூலும் இவரால்ல எழுதப்பட்டது எனக் கூறப்படுகிறது.

மற்றும் பன்னிரண்டு உபநிஷத்துகளுக்குத் தீபிகை. அத்வை தானந்த கீர்த்தனைகள், ஆத்ம வித்யா விலாஸம், அத்வைத ரஸ மஞ்சரி, ஸூத ஸம்ஹிதா ஸாரம் ஆகிய நூல்களையும் அவர் எழுதியிருக்கிறார்.

இவர் ஆத்ம வித்யா விலாசம் என்ற பெயரில் ஒரு நூல் எழுதியிருக்கிறார். அதில் தனக்கு பிரும்ம ஞானம் வந்தபின் ஏற்பட்ட அனுபவங்களை விவரித்திருக்கிறார்.

"ஞானியானவன் பைத்தியக்காரன் போலும் இருப்பான். ஆத்மானந்த பரவசனாக சில சமயம் தியானத்திலும் சில சமயம் பாட்டுகளிலும் பொழுது போக்குவான். அவனை ஒரு வேடன் எனலாம். விசாரம் என்ற வலை போட்டு சஞ்சலமான மனம் என்ற மானைப்பிடித்து வேதம் என்ற காட்டில் விளையாடிய சிரமத்தை தன் வீட்டில் அதாவது தன் ஸ்வரூபத்தில் போக்கிக் கொள்கிறான்" என்கிறார். மோட்ச மார்க்கத்திற்கு மனது விரோதியானது. அதை நாசம் செய்தால் தான் ஆத்மானந்தம் விளங்கும்.

நவமணி மாலை என்ற அவரது பத்து சுலோகங்கள் கொண்ட நூல் குருவின் மகிமையை வர்ணிப்பது. குருபக்தி ஞானம் வரு முன்பும் ஞானம் வந்த பின்பும் வேண்டும். "ஸதைவ வந்த நீயாஸ்தே வேதாந்தோ குரு ரீஸ்வர: ஆதௌ ஞான ப்ரஸித் யர்த்தம் கிருதக்னத் வாபநுத்தயே" என்பது பெரியோர் வாக்கு எக்காலத்திலும் வேதாந்தத்தையும் குருவையும் ஈஸ்வரனையும் நமஸ்கரிக்க வேண்டும். ஞானத்திற்கு முன், ஞானத்தை அடையும் பொருட்டு, பின்பு அவர்களிடம் நன்றி செலுத்தும் பொருட்டு என்று பொருள், இவர் குருபாதுகா பஞ்சகம் என்று ஒரு ஸ்துதி இயற்றியிருக்கிறார். அதில் குருவின் பாதுகைகளே ஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி பிரளய காரணமான பரப்பிரும்ம ஸ்வரூவமாக அவர் வருணித்திருக்கிறார்.

## கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள்

அவதூத பரம்பரையில் இவர் சேர்ந்தவரல்ல என்றாலும் புதுக்கோட்டையுடன் இவர் சம்பந்தப்பட்டிருப்பதால் இவரையும் இம்மகான்கள் வரிசையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இவரது சமாதி புதுக்கோட்டைக்கு 10 மைலிலுள்ள அரிமளம் என்ற கிராமத்திலுள்ளது.

ஆலய திருப்பணி செய்வதையே தன் வாழ்வின் லட்சியமாகக் கொண்டவர் சுந்தர சுவாமிகள். இளம் பிராயத்திலேயே உலகப்பற்றைத் துறந்து ஆத்ம ஞானத்தில் திளைத்த மகான் இவர். வேதாந்த மேதை ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் பெண்வழி சந்ததியாகத் தோன்றியவர். நெல்லைமாவட்டத்தில் கங்கை கொண்டானில் 1831-டிசம்பர் 3-ம் தேதி பிறந்தார். இவர் காசியில் இருக்கிறபோது, கணபதி சுவாமிகள் என்ற மகானின் தொடர்பு ஏற்பட்டது. மணிகர்ணிகா கட்டத்தில், இவர்கள் இருவரின் உருவச் சிலைகள் இருக்கின்றன.

திருநெல்வேலி கோடக நல்லூர் நாணல் காட்டில் இவர் அடிக்கடி நிஷ்டையில் ஆழ்ந்து விடுவதுண்டு. அதனாலேயே இவருக்கு கோடக நல்லூர் சுவாமிகள் என்று பெயர் ஏற்பட்டது.

எழுபது அல்லது எண்பது ஆண்டுகளுக்கு முன்பு நிறைய திருநீரும் கழுத்தில் ருத்ராக்ஷமும் இல்லாத ஒரு நாட்டுக் கோட்டை செட்டியாரைக் கூட பார்க்க முடியாது. அதற்குக் காரணம் சுந்தர சுவாமிகள்தான். இவர் உத்தரவுப் படி செட்டி மார்கள் ஏராளமாக கோவில்களுக்குத் திருப்பணி செய்தார்கள். 1872-ல் திருவையாறு சப்த ஸ்தான ஸ்தலங்கள் ஏழு ஆலயங் களுக்கும் ஒரே நாளில் இவர் கும்பாபிஷேகம் செய்வித்தார்.

இவருடைய சீடர்களில் சங்கீத மேதை மகா வைத்தியநாத சிவனும் இலக்கிய மேதை மனோன்மணியம் ஆசிரியர் பி. சுந்தரம் பிள்ளையும் முக்கியமானவர்கள். ஸ்ரீ சுந்தரம் பிள்ளை தன் மனோன்மணி நாடகத்தில் தன் குரு சுந்தர சுவாமிகளை "சுந்தர முனிவர்" என்ற பாத்திரமாக சிருஷ்டித்து கதாநாயகி மனோன் மணி மூலம் இவ்வாறு அஞ்சலி செலுத்துகிறார்.

சுந்தர முனிவன் சிந்தூர அடியும்
வாரிசம் போல மலர்ந்த வதனமும்
கருணை அலையெறிந்தொழுகும் கண்ணும்
சாந்தமும் தயையும்; தங்கிய உடலும்
மாந்தளிர் வாட்டும் மேனி
....எண்ணும் தோறும் குதித்து
நண்ணும் என் உள்ளம்
நன்னியத் தவத்தே

சுவாமிகளின் உபதேசங்கள் சுவானுபூதி ரசாயனம், சுவானு பவ ரச மஞ்சரி, நிஜானந்த விலாசம் ஆகிய மூன்று நூல்களில் அடங்கியிருக்கிறது. இவற்றில் நிஜானந்த விலாசம் மிகவும் முக்கியமானது. இம்மூன்று நூல்களிலும் வேதாந்த தத்துவ ஞானம் அடைவதற்கும், அவசியமான முயற்சியும் உபாயங்களும் அனுபவ பூர்வமாகவும் தெளிவாகவும் விளக்கப்பட்டுள்ளன.

தமிழ்தாத்தா டாக்டர் உ.வே. சுவாமிநாதய்யர் இவரைப் பற்றி எழுதியுள்ளதாவது. "சிவபக்தி செல்வத்தை தமிழ் நாட்டில் நன்றாகப் பரவச் செய்து பெரும் புகழுடன் விளங்கிய புண்ணிய சீலர்கள். பலர். அவர்களில் ஒருவரான கோடகநல்லூர் ஸ்ரீ சுந்தர சுவாமிகளை நான் திருவாவடுதுறை மடத்தில் படித்த காலத்தில்

சந்திக்கும் பாக்கியம் கிடைத்தது. இவர்களுடைய தோற்றப் பொலிவையும் இன்னுரைகளையும் கண்டும் கேட்டும் இன்புற்றேன்." ரிஷிகேசம் ஸ்ரீ சிவானந்தர் ஸ்ரீ சுந்தர சுவாமி களைப் பற்றிக் குறிப்பிட்டதாவது, "எத்தகைய சாந்த நிலை எத்தகைய காரிய சக்தி அவர் சென்ற இடமெல்லாம் மக்களை திருத்தினார். மிக சக்திவாய்ந்த காந்தம் அவர்."



## "ஜட்ஜ் ஸ்வாமிகள்"

### என்கிற

### ஸ்ரீமத் சதாசிவ பிரும்மேந்திர அவதூத ஸ்வாமிகள்.

ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகள் என்று வழங்கப்படும் ஸ்ரீ மத் சதாசிவ பிரும்மேந்திரர் பூர்வாஸ்ரமம் பற்றி எதுவும் தெரியவில்லை. அவர் திருவனந்தபுரத்தில் ஒரு நீதிபதியாக இருந்தார் என்று தெரிகிறது.

ஒரு வழக்கில் எதிரி குற்றவாளி தான் என்று சந்தர்ப்ப சாட்சியங்கள் எல்லாம் தீர்மானிக்கச் செய்து விட்டன. அவன் என்னமோ "நிரபராதி" தான் என்பது நீதிபதியின் மனதில் பட்டுவிட்டது. சட்டப்படி குற்றவாளிக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும். நிரபராதிக்கு தண்டனை விதித்தால் தன் குடும்பம் என்ன ஆகும்?

ஒன்றும் முடியாத நிலையில் பதவியை உதறுகிறார். அத்துடன் பந்தம், பாசம், பற்று எல்லாவற்றையும் உதறுகிறார். ஏன்! தனக் கென்று ஒரு ஆடையும் கூடவேண்டாம் என்று உதறி விடுகிறார்.

எங்கெல்லாமோ சுற்றிய பின் கண்ணப்ப நாயனாருக்கு இறைவன் அருள் செய்த காளத்தி மலையில் இவருக்கு குருநாதன் கிடைக்கிறார். அங்குள்ள குகையொன்றில் ஸ்ரீமத் ராமகிருஷ்ண

பிரும்மேந்திர சுவாமிகள் தங்கியிருந்தார். அவர் இவருக்கு தீக்ஷையளித்து நெரூர் சதாசிவ பிரும்மேந்திரர் சமாதியை தரிசிக்க அனுப்பினார். அங்கு சில காலம் தங்கியிருந்த பின் குற்றாலமலைக் காடுகளயே இவர் தன் வாசஸ்தலமாகக் கொண்டார். இவர் வெளி உலகத் தொடர்பே அற்று இருக்கையில்தான் ஸ்ரீமத் சுயம்பிரகாச பிரும்மேந்திரர் இவரை வந்தடைந்தார்.

கடைசி காலத்தில் ஜட்ஜ் சுவாமிகள் புதுக்கோட்டையைத் தன் இருப்பிடமாகக் கொண்டார். பல்லவன் குளம் வடகரை யிலுள்ள சம்ஸ்கிருத பாடசாலையில்தான் இவர் தங்கியிருந்தார். தினமும் காலையில் பிரும்ம ஸூத்திரத்திற்கு ஆதிசங்கரர் செய்த பாஷ்யத்தை விளக்கி வரலானார். இவர் 1908-ல் புதுக்கோட்டை யில் சமாதியடைந்தார். இந்த சமாதியில் தான் இப்போது புவனேஸ்வரி அதிஷ்டானம் அமைந்துள்ளது.

அன்று ஸ்ரீமத் சுயம்பிரகாச பிரும்மேந்திரர் கூறியது இன்று உண்மையாகியிருக்கிறது. "இந்த அதிஷ்டானம் ஏதோ சாதாரணமான இடம் என்று நினைக்க வேண்டாம். இங்கு ஒரு பெரிய பிரும்மக்ஞானி சமாதி கொண்டிருக்கிறார். சேந்தமங்கலம் ஆலயத்தைவிட இது இன்னும் பெரிதாகி விளங்கப்போகிறது. இதன் புகழ் நாடெங்கும் பரவப் போகிறது. இந்த இடத்தில் வந்து வழிபடுபவர்களுக்கு ஆத்ம சாந்தி கிடைக்கும்." இது இன்று நூற்றுக்கு நூறு உண்மையாகி வருகிறது.

ஜட்ஜ் சுவாமிகள் கோதாவரி தீரம் தவளேஸ்வரத்தில் பிறந்தவர். இளமையிலேயே வடமொழியிலும் தெலுங்கிலும் பாண்டித்யமடைந்தார். சென்னையில் படித்து சட்டப்படிப்பு தேறி வக்கீல் ஆனார். இவர் தொழிலில் புகழ்பெற்று திருவாங் கூரின் நீதிமன்றத்தின் நீதிபதியாக நியமிக்கப்பட்டார்.

ஒரு சமயம் கொலை வழக்கு ஒன்றை விசாரிக்க வேண்டி வந்தது. இவ்வளவு காலம் நீதிபதியாக இருந்தும் ஓர் உயிரை சிருஷ்டிக்க முடிந்ததா? அழிக்க மட்டும் முடியும். இது என்ன தொழில் என்று வேலையை உதறியபின் காஞ்சியில் உபநிஷத் ஆசிரமத்தில் வந்து சில நாட்கள் தங்கினார். தில்லையம்பலத்தில் கனவு கண்டதற்கிணங்க ஞானகுரு சந்நிதானத்தைத் தேடி காளத்தியை நோக்கிச் சென்றார். அங்குதான் அவருக்கு ஞான குரு கிடைத்தார். அதன் பின் பல இடங்களில் சுற்றிவிட்டுத் தான் கடைசியாக புதுக்கோட்டை வந்து சேர்ந்தார்.



## ஸ்ரீமத் சுயம் பிரகாச பிரும்மேந்திர அவதூத ஸ்வாமிகள் *

விழுப்புரம் அருகிலுள்ள கல்பட்டு என்ற கிராமத்தில் பிறந்தவர். பூர்வாச்சிரமத்தில் கிருஷ்ண மூர்த்தி என்று பெயர் பெற்ற இவர் தன் தந்தை ராமஸ்வாமி அய்யர் இறந்த பின் வைராக்கியம் ஏற்பட்டு சற்குரு ஒருவரைத் தேடி ஊர்ஊராய்ச் சென்றார். பல தலங்களுக்குச் சென்றபின் தாம்பிரபரணி தீரத்திலுள்ள அகஸ்த்யகூட பர்வதம் (பொதிகைமலை) என்ற இடத்தில் ஸ்ரீமத் ராமகிருஷ்ண பிரும்மேந்திரர் என்ற மகானின் சிஷ்யரான ஸ்ரீமத் சதாசிவ பிரும்மேந்திரரைக் (இவர்தான் ஜட்ஜ் சுவாமிகள்) கண்டார்.

கண்டதும் கிருஷ்ண மூர்த்தியின் மனம் அனலில் முன்னுள்ள மெழுகுபோல் உருகியது. தான் தேடிவந்த குருநாதர் இவரே என்று இவர் மனதில் பட்டது. சாஷ்டாங்கமாக தண்டனிட்டு தன்னை சிஷ்யனாக ஏற்று உபதேசம் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

அம்மகான் இவர் மீது கற்களை ஒன்றன் பின் ஒன்றாக வீசிய வண்ணம் இருந்தார். இவரும் அவைகளை எல்லாம் பொறுக்கி அவர் காலடியில் குவித்தார். இவருடைய பொறுமையைக் கண்டு அம்மகான் மெல்ல புன்னகை செய்தார். தீக்ஷை அளித்து சுயம்பிரகாசர் என்ற தீக்ஷா நாமம் இட்டார். அன்று முதல் பன்னிரண்டு ஆண்டு காலம் இவர் குருவுடனேயே தங்கி குருகுலவாசம் செய்தார்.

---

*ஸ்ரீ சுயம் பிரகாச பிரும்மேந்திரர் சரிதம் வரகவி திரு. சுப்பிரமணியபாரதி எழுதிய சிறு நூலை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது.

பின்னர் குருநாதர் கட்டளைப்படி காசி, ஹரித்வாரம், பிரும்ம கபாலம், கங்கோத்ரி, யமுனேத்ரி, பிருந்தாவனம், கோகுலம், பத்ரி, நைமிசாரண்யம் ஆகிய இடங்களுக்குச் சென்று தண்ட காரண்யத்தில் பர்வதகுகைகளில் தங்கி தவம் இயற்றினார். பின்னர் தமிழ் நாட்டில் பலகாலம் பல தலங்களுக்கு சென்று விட்டு தபோதனர்கள் விரும்பும் இடமான திருவண்ணாமலையில் சிலகாலம் தங்கினார்.

திருக்கோவலூரில் இவர் தங்கியிருந்த போது அப்போது டெபுடி கலெக்டராக இருந்த ஸ்ரீ ராமஸ்வாமி அய்யர் அவதூத நிலையுடன் வெளியில் உலாவுவது கூடாது. என்று ஒரு தடையுத் திரவு பிறப்பித்தார். பின்னர் அவரே சுவாமிகளின் தொண்டில் ஈடுபட்டார்.

ஸ்ரீ பிரும்மேந்திர சுவாமிகள் ஒரு வீட்டில் அமர்ந்து இலையில் பிக்ஷை யுண்பதில்லை. மூன்று கிரகங்களின் வாசல்களில் நின்று கையேந்தி ஒரு வீட்டில் குழம்பு சாதம் ஒரு கவளம். ஒரு வீட்டில் ரசம் சாதம் ஒரு கவளம், ஒரு வீட்டில் மோர் சாதம் ஒரு கவளம் வாங்கி உண்பது வழக்கம்.

சேலத்தில் ஸ்வாமிகளை அரசாங்க அதிகாரிகள் பிடித்து அடைத்து விட்டார்கள். சுவாமிகள் சிறையிலிருந்து எல்லோரும் ஆச்சரியப்படும்படி வெளியே வந்து விட்டார்கள். அப்படி அவர் வெளியே வந்ததும் பெருமழை பெய்ததாம் அங்கு ஆறாண்டு காலமாக மழையில்லை. சுவாமிகளின் சக்தி இப்படி வெளிப்படவே அவரை தரிசிக்க ஏராளமான பேர்கள் வந்தார்கள்.

இவர்கள் சேலத்திலிருந்து சேந்த மங்கலம் சென்று அங்கே ஒரு மலைக்குகையை தன் வாசஸ்தலமாகக் கொண்டார். அங்கு அவருக்குப் பல சிஷ்யர்கள் ஏற்பட்டனர். அங்கேயே தத்தாத்திரேயருக்கு ஓர் ஆலயம் அவர் ஏற்படுத்தினார். தத்தகிரி குகாலயம் என்ற பெயர் இத்தலத்திற்கு ஏற்பட்டது.

இவர் தன் குருவின் அதிஷ்டானத்தை பிரபலப்படுத்தி அங்கு ஆலயம் கட்டவேண்டும் என்று விரும்பினார். அவர் விரும்பியதை நிறைவேற்றி வைக்கும் பாக்கியம் அவருடைய சிஷ்யர் ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகளுக்கே கிடைத்தது.

இவர் துறவறம் மேற்கொண்ட விவரமாவது.

கிருஷ்ணமூர்த்தி கும்பகோணத்தில் படித்தவர். வடமொழியில் அபார பாண்டித்யம் பெற்றவர். ஓர் உத்யோகமும் கிடைத்தது. இவருக்கு வாழ்க்கையிலேயே நாட்டமில்லை. இதற்கிடையில் திருமணப் பேச்சு வேறு கிளம்பியது. இஷ்டத்திற்கு விரோதமாக தமையனார் இவரை திருமணத்திற்கு வற்புறுத்தினார். இவர் மறுக்கவே தமையனார் கோபமடைந்து "உன்னைப் படிக்க வைத்த பணத்தை கொடுத்து விட்டு எங்கேயாவது தொலை" என்றார். அதன்படியே தான் சேத்து வைத்திருந்த ரூ.500 ஐ கொடுத்து விட்டு "உங்களுக்கும் எனக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை பந்தமுமில்லை" என்று கூறி உத்யோகத்தையும் துறந்து விட்டு கால்நடையாகவே காசிக்குப் புறப்பட்டு விட்டார். காசியில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமிகளை சந்தித்து துறவறம் வேண்டி மூன்று ஆண்டு பொறுத்திருந்தார். ஆனால் அவர் பெற்றோர் சம்மதம் இல்லாமல் துறவறம் அளிக்க முடியாது என்று கூறிவிட்டார்.

மதுரையில் ஒரு மகான் தங்கியிருந்து தவயோகம் செய்கிறார். அவர் பெயர் ஜட்ஜ் சுவாமிகள் என்று கேள்விப்பட்டு அவரை வந்தடைந்தார். அவரும் பெற்றோர் சம்மதம் தேவை என்றார். தந்தை காலமாகிவிட்டார். தாயாரிடமிருந்து சம்மதம் பெறுவது கஷ்டம் என்று விளக்கினார் கிருஷ்ணமூர்த்தி. "நீ இடையில் மட்டும் ஒரு வஸ்திரத்துடன் உன் அன்னையைக் கண்டு வலம் வந்து வணங்கு. பின் மூன்றே முக்கால் நாழிகை அவளுடைய சந்நிதியில் இரு. பின் நீ விரும்பும் அவதூதமும் துறவமும் மேற்கொள்" என்றார் ஜட்ஜ் சுவாமிகள். அம்மாதிரியே செய்து துறவறம் மேற்கொண்டார். இவர் தத்தாத்ரேயப் பிரதிஷ்டையின் அடித்தளத்திலேயே சமாதியில் அமர்ந்தார்.

---

க்ஷுத்ரக்ரஹம் (நீச தேவதைகள்) சத்ருக்கள், விஷ ஜ்வரம், பூதங்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் இவர்களால் மிகுந்த கஷ்டம் ஏற்பட்டபொழுது அந்த அந்த கஷ்டத்திற்கு தக்கவாறு ஸ்ரீ அம்பாளின் மந்திரத்தை ஜபிக்கும் உபாஸகன், நூறு அல்லது இரு நூறு அல்லது முன்னூறு அல்லது நானூறு ஆவர்த்திகள் ஹோமம் செய்ய வேண்டும். இப்பொருளைக் கூறும் சுலோகம்.

ஏகத்விகத்ரிக சதுஷ்கசதாபிவ்ருத்யா
தாம்ஸ்தான்ஸமீக்ஷ்ய விக்ருதிம் ப்ரஜுஹோது மந்த்ரீ -
- ஆதிசங்கரர்.



## சத்குரு ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகள்

சுவாமிகளின் பூர்வா சிரமப் பெயர் சுப்பிர மணியன். மதுரையில் ராமஸ்வாமி · யோக அம்மாள் என்பவர்களுக்கு பதின் மூன்றாவது குழந் தையாகப் பிறந்தார். இவர் தாய் தந்தையர் இவர் குழந்தையாக இருக் கும் போதே காலமாகி விடவே இவரை இவர் சகோதரியே வளர்த்தார்.

தேசத் தொண்டிலும் நாம் சங்கீர்த்தனத்திலும் ஈடுபட் டிருந்த இவர் ஒருநாள் பாதசாரியாக கிளம்பிவிட்டார்.

இமயமலை அடிவாரம் சென்று சாதுக்களை சந்தித்து குருவைத் தேடி அலைந்தார்.

சிவானந்தர் இவருக்கு ஏற்ற குரு, தென்னிந்தியாவில் சேலம் மாவட்டத்தில் சேந்தமங்கலம் என்ற பிரதேசத்தில் கொல்லி மலைக் கருகாமையிலுள்ள காடுகளில் தவமிருக்கும் ஸ்ரீ சுயம் பிரகாச அவதூதர் என்று குறிப்பிட்டு இவரை அனுப்பினார்.

அதன்படியே சுப்பிரமணியம் அந்த அவதூத மகானைக் கண்டு பிடித்து அவரிடம் சரணடைந்தார். இவர் பலவித நிபந்தனை களுக்கும் பரீக்ஷைகளுக்கும் ஈடுகொடுத்து வைராக்யத்தை நிரூபித்து குருவினிடம் துறவற ஆசிரமம் பெற்றார். பின் குருவின் ஆக்ஞைபடி திகம்பரராக தவஞான யாத்திரையை மேற்கொண் டார். இவருக்கு தீக்ஷா நாமம் சாந்தானந்தர் என்று வைக்கப் பட்டது.

நைஷ்டிக பிரும்மசாரியாக காஷ்ட மௌனம் அப்யசித்து காடு, மலை, நாடு, நகரம் எல்லாம் சுற்றி காஞ்சி காமாக்ஷி

ஆலயத்திலுள்ள காயத்ரி மண்டபத்தில் ஓர் ஆண்டு தவம் செய்து ஸ்ரீ காமாக்ஷி அம்பிகையின் அருள் பெற்றார்.

பின் பழனி சென்று அக்கோவிலில் சில காலம் நிஷ்டையிலிருந்து மேற்கு மலைச்சாரலில் காடு வனாந்திரங்களில் தங்கி தவமிருந்தார்.

1947-ல் குருவாக்கையும் ஆணையையும் நடத்தி, மறு ஆண்டு, குருநாதர் சித்தியடையும் சமயம் அவரது பூரண கடாக்ஷத்தைப் பெற்று குரு கைங்கர்யமாக சேந்தமங்களம் அதிஷ்டானம் கோவில் தத்தாத்ரேயர் சந்நிதி இவைகளை பல விதங்களில் அபிவிருத்தி செய்து பரமகுரு "ஜட்ஜ்" சுவாமிகள் அதிஷ்டானத்தைப் புதுக்கோட்டையில் அந்த அதிஷ்டானத்தைப் புணருத்தாரணம் செய்து அங்கு புவனேஸ்வரி மாதாவை பிரதிஷ்டை செய்து 1956-ல் கும்பாபிஷேகம் செய்தார்.

உலக க்ஷேமத்திற்காக ஆண்டுதோறும் யக்ஞங்கள், ஹோமங்கள் புவனேஸ்வரி அதிஷ்டானத்தில் இவர்கள் நடத்தி வருகிறார்கள். மகா ருத்ரயக்ஞம், ஸ்ரீ சூக்த லக்ஷ ஹோமம், நவக்கிரக ஹோமம், லக்ஷதுர்க்கா ஹோமம் இவைகளை நடத்தி வேதத்தையும் வேதவித்துக்களையும் மந்திர தந்திர சாஸ்திர நிபுணர்களையும் ஆதரித்து வருகிறார்கள்.

இந்திய தத்துவ ஞானத்தில் ஆஸ்ரமங்கள் பலவகைப் பட்டவை. சந்நியாச ஆஸ்ரமம் சிறந்ததாயினும் அவற்றின் சிகரமாகத் திகழ்வது அவதூத ஆஸ்ரமம், தன்னை மறந்து உணர்வையே மறந்துபோகும் நிலைதான் அவதூத நிலை.

அவதூதராய் விளங்க வேண்டிய நம் ஸ்வாமிகள் உலக க்ஷேமார்த்தம் கருதி பல திருப்பணிகளும் பல ஹோமங்களும் நமக்காக செய்யவேண்டி தாம் காவியுடையிலேயே விளங்குகிறார்கள்.

ஸத்குரு ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள் ஒவ்வொரு ஆண்டும் பல அரிய யாகங்களையும் ஹோமங்களையும் நடத்தி வருகிறார். பல பிரபுக்கள் கூடி முயற்சித்தாலும் அந்த யாகங்களையும் ஹோமங்களையும் அம்மாதிரி நடத்த முடியாது. புவனேஸ்வரி உபாஸனையும் தவமும் அவர்களுக்கு அவ்வளவு சக்தியை அளித்திருக்க வேண்டும். இது நாமும் இந்நாடும் செய்த பாக்கியம்.

# அருள் சுரக்கும் அதிஷ்டானம் * 8

அன்று தமிழ் நாட்டில் பக்தி வளர்ப்புப் பண்ணையாக விளங்கி வந்தது புதுக்கோட்டை சமஸ்தானம். இன்றும் பக்தி வளர்க்கும் பண்ணையாக விளங்கிவருகிறது மாவட்ட தலைநகர் அந்தஸ்து பெற்ற அதே புதுக்கோட்டை இந்நகரில் மேற்கே ஸ்ரீ பிரஹதாம்பாளும், கிழக்கே புவனேஸ்வரியும் கோயில் கொண்டு அருள் பாலித்து வருகின்றனர்.

இருநூறு ஆண்டுகளுக்கு முன் மகா ஞானியாக விளங்கிய ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரர் புதுக்கோட்டை அரசனாக இருந்த தொண்டைமானுக்கு உபதேசம் செய்து நவராத்ரி உத்ஸவத்தை நடத்தும்படி பணித்தார்கள். அப்படி நடத்திய முதல் நவராத்திரி பூஜையில்தான் அம்பிகை உருவமுள்ள "அம்மன் காசு" வெளியிடப்பட்டது. நவராத்திரியில் துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வதி பூஜை நடத்தி சுவாஸினி பூஜையும் பல ஆண்டுகள் விடாமல் நடத்தப்பட்டு வந்தன.

எழுபது ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரர் அனுக்கிரகத்திற்கு புத்துயிர் கொடுக்க வந்ததுபோல அதே நாமத்துடன் அதே அவதூத சர்ச்சையுடனும் வந்து சேர்ந்தார் ஸ்ரீமத் சதாசிவ பிரும்மேந்திர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள். இவர் புதுக்கோட்டையில் சமாதியடைந்தார்கள். அக்காலத்தில் புதுக்கோட்டையில் திவானாக இருந்த வெங்கடரமணதாஸ் நாயுடு என்பவர் இந்த மகானின் உடலை அடக்கம் செய்தார். ராஜாக் குளத்தின் கீழ்க்கரையில் சந்யாசிகளுக்கு சமாதி வைப்பதற்கென்றே இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. அதன்படி இந்த பிரும்மேந்திரரின் சமாதியும் அங்கு இடம் பெற்றது.

காலக்கிரமத்தில் இந்த இடம் எது என்று கண்டுபிடிக்க முடியாமல் மேடிட்டு விட்டது. நகர அபிவிருத்தி திட்டத்தில் இந்த இடமெல்லாம் மனைக்கட்டுகளாகப் பிரிக்கப்பட்டு ஏலம் போடப்பட்டது. சுவாமிகளின் சமாதி இருந்த இடம் உள்பட

*அதிஷ்டானத்தின் காரியதரிசி ஸ்ரீ எஸ். வைத்யநாத சாஸ்திரிகள் எழுதிய தமிழ்க் கட்டுரை யொன்றையும், ஸ்ரீ டி.ஆர். ராஜகோபாலய்யர் எழுதிய ஆங்கிலக் கட்டுரையொன்றையும் ஆதாரமாகக் கொண்டது.

ஐந்து மனைகள் அக்காலத்தில் புதுக்கோட்டை சீப் கோர்ட்டு நீதிபதியாக இருந்த ஸ்ரீ பத்மநாப சாஸ்திரிகளால் வாங்கப் பட்டது. அவர் இங்கு தோட்டம் போட்டார். சமாதி ஸ்தவம் அங்கிருப்பது என்பதே எல்லாருக்கும் மறந்துவிட்டது அப்படி அங்கு இருக்கிறது என்று சொல்லக் கூடியவர்களும் காலமாகி விட்டார்கள்.

அப்போது சேந்தமங்கலம் ஸ்ரீ ஸ்வயம்பிரகாச அவதூத சுவாமிகள் பெயர் பிரபலப்படவே புதுக்கோட்டை பிரமுகர்கள் சிலர் அவரைத் தரிசனம் செய்யச் சென்றனர்.

ஸ்ரீ ஸ்வாமிகள் அப்போது கூறிய சில வார்த்தைகளே இந்த அதிஷ்டானம் தோன்றக் காரணமாயிற்று.

அவர்கள் கூறியதாவது: "இங்கு வந்து என்னைப் பார்ப்பதில் பிரயோஜனமில்லை. உங்கள் ஊரில் என் குருநாதர் சமாதி ராஜாக் குளக்கரையின் கீழ்க்கரையில் உள்ள காம்பவுண்டுக்குள் இருக் கிறது. அதன்மேல் ஒரு துளசி மடமோ ஆலயமோ கட்டி விளக் கேற்றி வைத்து இரு காலம் பூஜை செய்து வந்தால் உங்கள் ஊருக்கே க்ஷேமமுண்டாகும்."

இதைக் கேட்ட புதுக்கோட்டை சீப்கோர்ட்டு ஜட்ஜ் ஸ்ரீ பி.வி. ரகுநாத் ஐயர் உடனே இவ்விஷயமாக பெரு முயற்சிகள் எடுத் தார். அந்த நிலச் சொந்தக்காரரான ஸ்ரீ பத்மநாப சாஸ்திரிகள் காலமாகிவிட்டார். ஸ்ரீ ரகுநாதய்யர் கேட்டுக்கொண்டதன் பேரில் ஸ்ரீ பத்மநாப சாஸ்திரிகள் மனைவி ஸ்ரீமதி தேவநாயகி அம்மாளும், அவர் குமாரர் ஸ்ரீ.பி.பாலசுப்பிரமணிய சாஸ்திரி களும் அந்த காம்பவுண்டுக்குள் இருக்கும் நிலம் முழுவதையும் அதிஷ்டான நிர்மாணத்திற்கு மகிழ்ச்சியுடன் அளித்தார்.

தோட்டம் வாங்கியாகி விட்டதேயொழிய அதில் சமாதி இருக்குமிடம் எது என்பது கண்டு பிடிக்க முடியவில்லை. ஸ்ரீ சுயம் பிரகாச அவதூத ஸ்வாமிகள் உதவியே நாடப்பட்டது. அவர் தன் ஞான திருஷ்டியால் அறிந்து சொன்ன அளவுகளைக் கொண்டு பார்க்க பழைய சமாதியின் இடம் கண்டு பிடிக்கப்பட்டது. காம்பவுண்டிற்கு முன்புறமும் பின்புறமும் ஏற்கனவே இருந்த வாசற்படி இந்த அதிஷ்டானத்திற்கு மையம் எடுத்து வைக்கப் பட்டது போல் அமைந்திருந்ததும் ஓர் ஆச்சரியம்.

1936-ல் அதிஷ்டானக் கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டது. சேந்தமங்கலம் சுவாமிகளின் சிஷ்யரான ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகள் அதிஷ்டானத்தைக் கட்ட மிகப் பிரயாசை எடுத்துக் கொண்டார்கள். ஸ்ரீ சேந்தமங்கலம் சுவாமிகள் தன்னிடமிருந்த நர்மதா பாணலிங்கத்தைக் கொடுத்து இந்த அதிஷ்டானத்தில் பிரதிஷ்டை செய்யச் சொன்னார்கள். அதைப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் 1936-ல் சேந்தமங்கலம் சுவாமிகளால் செய்யப்பட்டது.

கும்பாபிஷேக சமயத்தில் ஸ்ரீசுவாமிகளுக்கு காளப்பேட்டை ஸ்ரீ. ஜி. சிவராம சாஸ்திரிகள் பிக்ஷை செய்வித்தார். பிக்ஷை முடிந்ததும் சுவாமிகள் சாஸ்திரிகளிடம் மூன்று நாளாய் சாப்பாடு போட்டு விட்டாய். கும்பாபிஷேகம் முடிந்தவிட்டது. நாளை முதல் ஸத்குருநாதர் பட்டினி கிடப்பாரா? என்றார். சுவாமிகள் குறிப்பையறிந்த சாஸ்திரிகள் "நைவேத்யத்திற்கு என் சக்திக்குத் தக்கபடி செய்கிறேன்." என்றார். அவர் கைங்கரியம் தொடர்ந்து நடந்து வருகிறது.

ஸ்ரீ கைவல்யானந்தா என்ற அவதூத சுவாமிகள் இந்த அதிஷ்டானத்திலேயே இருந்து சமாதியடைந்தார்கள். அவர்கள் சமாதி வடகிழக்கு மூலையில் உள்ளது.

சில வருடங்களுக்குப்பிறகு சேந்தமங்கலம் சுவாமிகளின் சிஷ்யரான ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள் அடிக்கடி வந்து அதிஷ்டானத்தில் பூஜை நடந்து வருவதைக் கவனித்து வந்தார்கள். தினமும் விஷ்ணு சகஸ்ரநாம பாராயணம் செய்யும்படி ஊக்குவித்து வந்தார். ஆண்டுதோறும் கும்பாபிஷேகம் நடந்த திருநக்ஷத்திரத்தில் வர்ஷோத்ஸவம் நடந்து வந்தது.

ஒரு சமயம் அதிஷ்டானத்தின் முன், கீற்றுக் கொட்டனையில் ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள் முன்பு விஷ்ணு சகஸ்ரநாம பாராயணம் நடந்து கொண்டிருக்கும் போது மழை பெய்து கொட்டகையெல்லாம் ஒழுகி எல்லோரும் நினைந்து போக நேரிட்டது. அப்போது அங்கு ஒரு மண்டபம் கட்டுவது என்று ஸ்ரீமத் சுவாமிகள் சங்கற்பித்துக் கொண்டார்கள். இம்மண்டபம் சீக்கிரமே கட்டி முடிந்து ஸ்ரீதத்தாத்ரேய பகவானின் உத்ஸவ விக்ரஹம் பிரதிஷ்டை செய்யப்பட்டு கும்பாபிஷேகம் 1956-ல் வெகு விமரிசையாக நடத்தப்பட்டது.

இச்சமயம் ஒரு சிற்பி ஸ்ரீ புவனேஸ்வரி தேவியின் படம் ஒன்று எழுதி அதிஷ்டானத்திற்கு கொண்டு வந்து ஸ்ரீமத் சுவாமிகளிடம் சமர்ப்பித்தார். அப்படம் மிக நன்றாக அமைந்திருந்தது. அப்படத்தில் ஆவாஹனமான ஸ்ரீ புவனேஸ்வரி தேவிக்கு நித்ய ஆராதனமும் விசேஷ தினங்களில் லக்ஷார்ச்சனையும் நடந்து வந்தன.

1959-ல் புவனேஸ்வரியின் அழகான பஞ்சலோக விக்கிரகம் சுவாமிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்டு ஆராதனம் செய்யப்பட்டு வந்தது. ஸ்ரீசுவாமிகளுக்கு தேவியின் மூலஸ்தானம் ஒன்று அமைக்க வேண்டும் என்ற எண்ணமும் உதித்தது. இதற்கும் தேவியின் அருளால் பக்தர்களின் ஆதரவு கிடைத்தது. இச்சமயத்தில் காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் அதிஷ்டானத்திற்கு விஜயம் செய்து அனுக்கிரஹம் செய்தார்கள். ஸ்ரீ ஆச்சார்யர் வருகை நடமாடும் காமாக்ஷியே நேராகவந்து அனுக்கிரஹித்ததாக ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள் கருதினார்கள்.

சீக்கிரமே ஸ்ரீ தேவியின் சந்நிதிக் கட்டிடம் கட்டிமுடிந்தது. ராஜகோபுரமும் கட்டி முடிக்கப்பட்டது. ஸ்ரீ புவனேஸ்வரியின் சிலா விக்ரகம் 51/2 அடி உயரத்தில் உட்கார்ந்த நிலையில் திருமுருகன் பூண்டி ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்தபதியால் செய்யப்பட்டு 1962 ஜூன் 6-ம் தேதி பிரதிஷ்டா மகா கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது.

அன்னை புவனையின் உருவம் அருளே வடிவானது. அவள் வலப்புறத்தில் சித்தி விநாயகரும், இடப்புறத்தில் ஸ்கந்தனும் முன் மகாமேருவும் இடம் பெற்றுள்ளனர்.

ஸ்ரீ புவனேஸ்வரி தேவியை உபாசித்தாலே உலகில் எல்லாவற்றையும் அடையலாம் என்பதும் எல்லா கஷ்டங்களும் விலகுவதற்கும் ஸ்ரீ புவனேஸ்வரி மந்திர ஜப ஹோமமே சிறந்தது என்று மந்திர சாஸ்திரங்கள் கூறுகின்றன. இப்படிப்பட்ட மங்களமான பலன்கள் உலகிற்கு உண்டாக வேண்டும் என்று ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள் பல ஹோமங்கள் மஹாயாகங்களை 1957-ம் ஆண்டு மஹா கணபதி ஹோமத்துடன் ஆரம்பித்து ஆண்டுக்கு ஒன்றாய் நடத்தி வருகிறார்கள்.

## அதிஷ்டானத்திலுள்ள மூன்று குரங்குகள்

திருமதி சிவபிருந்தா தேவி ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிற விஷயம்:

"அதிஷ்டானத்திலே மணிமண்டபத்தின் கீழே மூன்று குரங்குகளின் படங்கள். ஓசை எழுப்பி உள்ளத்தைக் கள்ளமின்றி அடக்கி ஒன்று படச்செய்யும் அந்த இடத்திலே அந்த மூன்று குரங்குகளின் ஒன்று வாய் மூடி இருக்கிறது. மணி ஓசையிலே உன் வாய் ஓசை அடங்கட்டும் என அந்த முதல் குரங்கு வாய் மூடி காட்டுகிறது. அடுத்த குரங்கு கண்ணைக் கை கொண்டு மூடியிருக்கிறது. குருவருள் நாடி திருவருள் துய்க்க வந்த நீ எல்லாவற்றிலும் குருவருளைப்பார். மற்றதை பாராதே என பரிவுடன் உணர்த்துகிறது. மூன்றாம் குரங்கு காதைப் பொத்திக் கொண்டிருக்கிறது. கண்டாமணி ஓசையிலே கடவுள் தத்துவமின்றி மற்றது உன் காதில் புகாது. தவறி புகுந்து விட்டால் என்ன செய்வது! உன் காதை அடைத்துக்கொள், எனக் காட்டுகிறது. இதே மூன்று குரங்குகள் கிணற்றங்கரையிலும் சித்தரிக்கப்பட்டுள்ளது. ஸ்வாமிகள் இருப்பிடத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. கிணற்றங்கரையில் கை, கால் சுத்தம் செய்யும் மனிதனும் கண்ணையும், காதையும், வாயையும் வக்கணையாக சுத்தம் செய்து கொள்ள முக்குரங்கும் தக்க பக்குவம் தருகின்றது. கனிந்த உருவத்தோடு விளங்கும் குரு மஹான் இருப்பிடம் சேர்ந்து குருவார்த்தைக்கு மறுவார்த்தை இல்லை என்பது போல திருவார்த்தை கேட்டு திரும்புமுன் ஆங்கும் முக்குரங்கு கண்டு முடிந்த முடிபுணர்ந்து, திருசுற்று முடிந்து கண்டா - மணியிடத்திலும் வந்து குரங்கினை நினைத்து குவலயத்தில் என்னதான் ஆடி ஓடித்திரிந்தாலும் "சில மந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்கும் திருவையாறே" என்பது போல அடங்கி ஒடுங்கியே ஆக வேண்டும் என்பதை குருமகான் சொல்லாற் சொல்லாமல் முப்புறத்திலும் முக்குரங்கை நிறுத்தி வைத்து நம் வாழ்க்கை முறையை உணர்த்தி விட்டார்கள்."

அதிஷ்டானம் அழகே உருவானது, அருளே வடிவானது. தூய்மையே துணையாக கொண்டது. கடவுளே இல்லை என்று சொல்லக்கூடியவர்களும் கூட இச்சந்நிதி வந்ததும் எங்கும் காணா மன அமைதி கிடைப்பதாக சொல்லக்கூடிய பெரிய அற்புதம் வாய்ந்த அதிசயப் புனித பொற்பீடம்.

# ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம்*

ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகள் ஆற்றிவரும் அரும்பணிகள் பல. அதில் ஒன்று ஸ்காந்தாஸ்ரமம். ஸ்ரீசுவாமிகளை சிறு வயதிலேயே ஆட்கொண்டவர் தண்டபாணியான முருகனே, அவர் பல குமரன் சந்நிதிகளில் தங்கி தவமியற்றியிருக்கிறார்கள்.

ஒரு நாள் இரவு சுவாமிகளுக்கு தண்டபாணி கனவில் தரிசனமளிக்கிறார். ஒரு மலை, அதன் மீது ஜோதி சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது. என் பணியை இங்கே தொடங்கு என்று சொன்னது போல அவர் மனதில் பட்டது. மறுநாள் காலையில் ஓர் அன்பர் தண்டபாணி விக்ரகத்தை கொண்டுவந்து சுவாமிகளிடம் கொடுக்கிறார். சேலத்திலிருந்து வந்த அன்பர் இவரை ஒரு மலைக்கு அழைத்துச் செல்கிறார்.

சுவாமிகள் கண்டது கனவல்ல. அவர் மனதில் கொண்டிருந்த சங்கல்பம். இது 1966-ம் ஆண்டு கடைசியில் நடைபெற்றதாகும். 1967-ம் ஆண்டு ஒருநாள் ஸ்ரீ சுவாமிகள் ஓர் அன்பருடன் பேசிக்கொண்டிருக்கும்போது கனவில் கண்ட குன்றை கண்டு பிடிக்கமுடியவில்லை என்று குறைப்பட்டுக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் சேலத்திலிருந்து வந்த அன்பர் இந்தமலைக்கு அழைத்து வந்தார். இந்த இடம் சேலத்திலிருந்து ஆத்தூர் செல்லும் பாதையில் உள்ள உடையார்பட்டி என்ற சிற்றூரில் உள்ளது. நாற்புறமும் வானளாவிய மலைகள். இடையில் ஸ்கந்தகிரி பக்கத்தில் கன்னிமார் நதியின் தெளிந்த ஜலம் வற்றாது ஓடுகிறது. சாந்தியும் தெய்வ நம்பிக்கையும் தானாகவே பிறக்கும் உன்னதமான இடம்.

இந்த இடத்தை தேர்ந்தெடுக்க சில நாட்களில் அரசாங்கம் இதை ஆலயம் கட்ட சுவாமிகளுக்கு வழங்கினர். 1969 அக்டோபர் 31-ம் தேதி வேதாகம பாடசாலை துவக்கப்பட்டது. இங்குள்ள முருகன் அழகே உருவாய் அமைந்திருக்கிறான். அவனுக்கு எதிரில் அஷ்ட தசாபுஜ மகாலக்ஷ்மியின் அற்புத உலோக விக்ரக சந்நிதி அமைந்துள்ளது. இத்தல ஆலயத்தின் கும்பாபிஷேகம் 1971 பிப்ரவரி 8-ம் தேதி மிக சிறப்பான முறையில் நடைபெற்றது. திருவண்ணாமலை போன்று ஸ்கந்தகிரியிலும் கார்த்திகை மாதம் கிருத்திகா நட்சத்திரத்தில் தீப ஒளி மலையின் மீது பிரகாசிக்கிறது.

---

*ஸ்ரீஸ்கந்தாஸ்ரமத்தையே கருப்பொருளாகக் கொண்டு எழுதப்பட்டுள்ள பிரதிபா புத்தகம் "சரவணபவ சரணம்" அதில் ஸ்கந்தாஸ்ரம முழு விவரங்களைக் காணலாம்.

# தேவி யக்ஞும் 9

ஸாத்வீகம், ராஜஸம், தாமஸம் என்று தேவி யக்ஞும் மூன்று விதம், மகரிஷிகள் செய்வது சாத்வீக யக்ஞும், க்ஷத்திரியர்கள் செய்வது ராஜஸம், ராக்ஷஸர்கள் செய்வது தாமஸ யாகம் ஞானிகள் செய்யும் யாகம் இம்மூன்று குணங்களையும் கடந்தது. அது ஞானமயமான யாகம்.

நல்ல இடத்தில் நல்ல காலத்தில் நியாயமாகத் தேடியப் பொருள்களைக் கொண்டு நல்ல வேத வித்துக்களைக் கொண்டு மந்திரம் தவறாமல் சாத்வீக சிரத்தையுடன் செய்யும் யாகமே சாத்விக யாகம்.

திரவ்யசுத்தி, க்ரியாசுத்தி, மந்திரசுத்தி என்ற மூன்றும் இருந்தால்தான் பூர்ணபலன் உண்டாகும். அனியாயமாக சம்பாதித்தப் பொருளைக்கொண்டு யாகம் செய்தால் கீர்த்தியும் புண்ணியமும் வராது.

பாண்டவர்கள் ராஜஸூய யாகம் செய்தனர். பகவான் கிருஷ்ணனே அதில் நேரில் ஈடுபட்டிருந்தார். ஆனால் இந்த யாகத்திற்கு தேடிய பொருள் நல்ல திரவியமில்லாததால் பல துன்பங்களை அடைந்தனர். தம்பிமார்கள் திக்விஜயம் செய்து பொருள் தேடியபோது பல துஷ்டர்களுடைய செல்வமும் இதில் சேர்ந்தது. பாண்டவர்கள் அவதிபட்டதற்கு அஸத்துக்களின் பொருள் உபயோகிக்கப்பட்டதே காரணம்.

கர்த்தாவின் தவறுதல், மந்திரத் தவறுதல் இவைகளாலும் கர்மாவிற்குப் பலன் உண்டாகாது.

தேவேந்திரன் விஸ்வகர்மா என்பவரை தனக்குப் புரோகித ராக இருக்கும்படி செய்தான். அவரது தாய் அசுரவர்க்கம், ஆகவே தேவர் எதிரில் தேவர்கள் நன்மையை நாடியும் அவர்கள் இல்லாதபோது அசுரர்கள் நன்மையை நாடியும் ஹோமம் செய்தார். ஆதலால் அசுரர்கள் பலசாலிகள் ஆயினர். இது கர்த்தாவின் தவறுதலால் ஏற்பட்டது.

தசரதன் செய்த புத்திர காமேஷ்டியில் கர்த்தாவின் தோஷமில்லாததால் பலன் உண்டாயிற்று.

ஞானிகள் மோக்ஷத்தில் விருப்பம் கொண்டு மனதினால் செய்யும் யாகமே சிறந்தது.

முதலில் மனம் சுத்தி, மனம் சுத்தமானால்தான் உடல் சுத்தமாகும். விசாலமான மண்டபத்தை அமைத்து ஸ்தம்பங்களை நாட்டி மனதினால் வேதிகையை நிர்மானம் செய்ய வேண்டும் அக்னி களையும், பிரும்மா அத்வர்யு, ஹோதா, உத்காதா முதலிய ரிக்குகளையும் கல்பித்து மனதினால் பூஜை செய்யவேண்டும். மானஸீக யாகத்தில் பஞ்ச பிராணன்களே அக்னிகளாம்.

ப்ராணன்--கார்ஹபத்யம் ஸமானன்--ஆவஸத்தியம்
அபானன்--ஆஹவநீயம் உதானன்—சப்யாக்னி
வியானன்—தக்ஷிணாக்னி

யக்ஞத்திற்கு அதிதேவதை பரப்பிரும்மம் பயனை அளிப்பது நிர்க்குணமான சக்தி. அவள் எங்கும் வியாபித்திருக்கும் பிரும்ம வித்யை அவளை நாடியே ப்ராணாக்னியில் ஹோமம் செய்ய வேண்டும்.

பிறகு மனதையும் யாதொரு பிடிப்புமில்லாமல் செய்து கொண்டு பிராணனை சாச்வத பிரும்ம ஸ்வரூபமான குண்டலினி சக்தியில் ஹோமம் செய்ய வேண்டும். ஸ்வானுபாவத்தினால் ஸ்வரூபிணியாகி இருக்கிற மகேஸ்வரியை சமாதியினால் தியானம் செய்ய வேண்டும். சகல பூதங்களும் தன்னிடம் இருப்பதாகவும் கருத வேண்டும்.

இம்மாதிரி செய்தால் தேவி தரிசனம் கிடைக்கும். இத்தகைய தேவி யக்ஞமே முக்தியைத்தரும், மற்றவை லோகாந்திரத் திற்கு அழைத்துச் சென்று சுகத்தை அளித்து புண்ணிய பூமியில் பிறப்பைத்தரும்.

---

## வந்தே சாந்தானந்த யதீந்த்ரான்

ஈசஸ்யேச்சா குண்டலீ ஹ்ரீம் ஸ்வரூபா
ஸர்வாந்தஸ்தா சிந்த்யதே யை: ஸதைவ |
லோகோத்தாராஸக்தசித்தான் குரூம்ஸ்தான்
வந்தே சாந்தானந்த நாம்னோ யதீந்த்ரான் ||

ஈசனின் இச்சையாகியவளும் குண்டலீ ரூபிணியும் ஹ்ரீங்கார ரூபிணியும் எல்லாபொருள்களிலும் உள்ளே விளங்குகின்றவளு மாகிய புவனேச்வர்யை எப்போதும சிந்திப்பவரும் உலகத்தை நல்வழிப்படுத்த ஆசைகொண்டவரும் சந்யாசிகளில் சிறந்த வருமான ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளை வணங்குகிறேன்.

# வேள்விகள் - அதன் தாத்பர்யம்

ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகளுக்கு வேத வேள்விகளில் ஈடுபாடு அதிகம். பாரத தேசம் வளம் பெற்று வலிமையுடன் இருக்கவும், மக்கள் சுபிட்சமாக வாழவும் அடிக்கடி வேள்விகள் செய்யப்பட வேண்டும் என்பது அவரது கொள்கை.

வேள்விகள் செய்வதால் தேவர்கள் திருப்தியடைகின்றனர், அதனால் அவர்கள் மழை பெய்யச் செய்கின்றனர். மழையின் காரணமாக நீர்வளம் பெருகி மக்கள் சுபிட்சமடைகின்றனர். இந்த சக்கிரம் சதா சுழன்று கொண்டிருக்க வேண்டும் என்று கீதையில் கிருஷ்ண பரமாத்மா குறிப்பிட்டிருக்கிறார். கீதையே யக்ஞம், யாகம் இவைகளைச் செய்யும்படி வற்புத்துகிறது.

மூன்றாம் அத்யாயம் பத்தாவது ஸ்லோகம்:-

ஸஹா யக்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்டவா புரோவாச ப்ரஜாபதி
அனேன ப்ரஸ விஷயத்வ மேஷ்வோ ஸத்விஷ்ட காமதுக்

சிருஷ்டித் தொழிலை ஆரம்பிக்கும்போது, பிரும்மா யக்ஞத்துடன் பிரஜைகளை படைத்து "இதனால் விருத்தியடையுங்கள். இது உங்கள் காமதேனுவாக இருக்கட்டும்" என்றார்.

11 வது ஸ்லோகம்:-

தேவான் பாவய தானேன தே தேவா பாவயந்து வ:
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரம வாப்ஸ்யத.

இந்த யக்ஞத்தால் தேவர்களை வழிபடுங்கள், அந்த தேவர்கள் உங்களை போஷிப்பார்கள். ஒருவரை ஒருவர் பரஸ்பரம் பேணி காப்பாற்றிக் கொள்ளுங்கள்.

12-வது ஸ்லோகம்:-

இஷ்டான் போகான் ஹிவோ தேவா
  தாஸ்மந்தே யக்ஞ பாவிதா:
தைர் தத்தனே ப்ரதாமைப்போ
  புங்க்தே ஸ்தேன ஏவஸ:

யாகத்தால் வழிபடப்பட்ட தேவர்கள் உங்களுக்கு வேண்டியதை அனுக்கிரஹிப்பார்கள். அப்படி அவர்களால் கொடுக்கப்பட்டதற்கு கைம்மாறு அளிக்காமலிருப்பது திருட்டுத்தனமாகும். உயிர்கள் வாழ உணவு வேண்டும். இந்த உணவை உலகிற்கு அளிப்பது மழை. இதை உண்டாக்குவது யக்ஞம், யக்ஞத்தின் பிறப்பிடம் கர்மம்.

அந்தாத் பவந்தி பூதானி பர்ஜந்யாதந்ந ஸம்பவ: |
பஞ்ஜாத் பவதி பர்ஜன்யோ யஞ்ஜ: கர்ம ஸமுத்பவ: ||

முறையோடு செயல் புரிந்து வருவது கர்மம், அக்கர்மமே யக்ஞமுமாகும். அவனவன் ஒழுங்காகப் பணிபுரிந்துவரின் மழை பெய்யும், உணவு உண்டாகும், உயிர்கள் வாழும். இந்த உடல் மூன்று அக்னிகள் காரணமாக செயல்படுகிறது. அவை ஞானக்கினி, தர்சனாக்னி, கோஷ்டாக்கினி இம்மூன்று அக்னிகள் இவ்வுடலை ஆச்ரயித்திருப்பதனாலேயே இதற்கு சரீரம் என்று பெயர்.

கோஷ்டாக்கினி உண்ட உணவை சமைக்கிறது. அதாவது பக்குவப்படுத்துகிறது. தர்சனாக்னி ரூபங்களை காண்கிறது. ஞானக்கினி நல்லதும் கெட்டதுமான கர்மங்களை அறிகிறது. இவைகளின் ஸ்தானம் ஒன்று வயிற்றில் கோஷ்டாக்கினி இதற்கு கார்ஹபத்யம் எனப் பெயர். முகத்தில் தர்சனாக்கினி ஆஹவனீயம் இருதயத்தில் ஞானக்கினி இதை தக்ஷிணாக்கினி என்பர்.

தஸ்ய மத்யே மஹானக்னீர் விஸ்வார்ச்சி விச்வதோ முக: |
ஸோக்ரபுக் விபஜன் திஷ்டன்னாவஹார மஜர: கவி

இருதயத்தில் மத்தியில் அக்னி ஒன்று உண்டு. இந்த அக்னி பகவான் உணவை ஜரிக்கச் செய்கிறார். பார்வையை தருகிறார். பகுத்தறிவை தருகிறார். ஆத்மா யக்ஞம் செய்பவன். இத் தகவலை கர்ப்போபநிஷத் கூறுகிறது.

அந்த அக்னியின் கிரணங்கள் உடம்பு முழுவதும் பரவி உடல் செயல்பட உதவுகிறது. பரமாத்மாவே தான் அக்னி ரூபமாக நம் உடலில் இருக்கிறான்.

மனக்குகையான ஆகாசம் வெளி ஆகாசத்திலுள்ள சகலப் பொருள்களையும் கொண்டது. அக்னியும், வாயுவும், சந்திரனும், சூரியனும், மின்னலும், நஷத்திரங்களும் இன்னும் எது எது உண்டோ அவ்வளவும் மனக்குகையான தகராசத்தில் உள்ளது என்று சாந்தோக்ய உபநிஷத் கூறுகிறது. அம்பிகைக்கு தஹராகாசரூபிணி என்று பெயர் ஏற்பட்டது. இம்மனமான குகையில் வசிப்பவனாதலாலே முருகனுக்கு குகன் என்ற பெயரும் ஏற்பட்டது.

இந்த உடலில் பரமாத்மா இருக்கிறான் என்பதை உணர்ந்தே பொய்கையாழ்வாரும்.

உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தமனென்றும்
உளன் கண்டாய் உள்ளவர் உள்ளத்துளன் கண்டாய்
வெள்ளத்திலுள்ளானும் வேங்கடத்து
மேயானும் உள்ளத்திலுள்ளானென்றோர

என்றார்.

இதையே திருமூலர் உடம்பினை முன்னே யிழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புள்ளே யுத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே

என்றார்.

உடம்பினுள் உத்தமன் ஒருவன் இருந்துக்கொண்டு பார்த்துக் கொண்டிருக்கிறான் என்று நினைவிருந்தால் போதும். நாம் தவறுகள் செய்யமாட்டோம்.

## வைஸ்வாநரன்

ஸுஷும்னா நாடிக்குள்ளே ஒரு பெரிய அக்நி இருக்கிறது. அதுநாம் உண்ணும் உணவை முதலில் உட்கொண்டு பிறகு அதைப் பிரித்து அந்தந்த ஸத்துடன் சேர்க்கிறது. எல்லாவற்றையும் ஜீரணம் செய்கின்ற அந்த அக்நி தான் ஜீரணமாவதில்லை.

அது சாதாரண தீயில்லை. ஈஸ்வரன், "வைஸ்வாநரனாக இருந்து ப்ராணிகளின் உடலை அண்டி வசிக்கிறேன் உண்ணும் போது "ப்ராணாயஸ்வாஹா" என்று என்னை நாடி எனக்கு முன்னே ஹோமம் செய்கிறார்கள் அந்த ஆகாரம் மண்ணாகவும், ஜலமாகவும், அக்நி வடிவமாகவும் இருக்கிறது. அந்தை நான் பக்குவம் செய்து ஸ்தூலமான மண் அம்சமான ஆகாரத்தை மலத்துடன் சேர்க்கிறேன். மத்யமானதை மாமிஸாகவும் ஸூக்ஷ்மமானதை மனதாகவும் செய்கிறேன்" என்பது பகவான் பகவத்கீதையிலும் உபநிஷத்திலும் கூறுகிறார். அதனால்தான் நாம் உண்ணும்போது பயபக்தியுடன் உண்ண வேண்டும். இறைவன் வைஸ்வாநரன் என்ற அக்னியாக இருக்கிறார்.

## ஹிருதயத்தில் அக்னிஜோதி

நமது ஹிருதய கமலத்தின் நடுவில் ஓர் அக்னி ஜ்வாலை பிரகாசிக்கிறது. அதுவே பரமாத்மா இருக்கும் இடம்.

தஸ்ய ஶிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித: ||
(ஶிகா = ஜ்வாலை)

- நாராயண ஸூக்தம்

## ஹோமம்

அக்னி குண்டத்தில் பகவானை அக்னி ஸ்வரூபமாக தியானித்து ஹோமம் செய்யப்படுகிறது. அக்னி பகவான் மூல மாக இதர தேவதைகளுக்கும் ஹவிர்பாகம் அளிக்கப்படுகிறது. இன்ன காரியங்களுக்கு அக்னி குண்டத்தில் இன்ன இடத்தில் ஹோமம் செய்ய வேண்டும் என்கிற திட்டங்கள் உள்ளன.

## அக்னிக்கு நாக்கு ஏழு

(சப்த ஜிஹ்வா)

| | | |
|---|---|---|
| 1. ஹிரண்ய | மேற்கு | விவாக ஹோமம் |
| 2. ககநா | மத்தியில் | ஜாதகர்மா |
| 3. ரக்தா | வடக்கு | உபநயனம் |
| 4. கிருஷ்ணா | தெற்கு | பித்ரு காரியங்கள் |
| 5. ஸுப்ரபா | கிழக்கு | ஸர்வ காம்ய கர்மாக்கள் |
| 6. அதிரக்தா | அக்னி மூலை | உக்ர கர்மாக்கள் (ஆபிசாரம் போன்றவை) |
| 7. பஹுரூபா | ஈசான்யம் | சாந்திகர்மா |

அதிரக்தாவில் எள்ளு (தில) ஹோமமும், பகுரூபாவில் புஷ்ப ஹோமமும், ரக்தாவில் சருகு ஹோமமும், ஸுப்ரபாவில் ஸத்துமா பொரிமா ஹோமமும், மற்ற மூன்றில் நெய் ஹோமமும் செய்ய வேண்டும். ஆத்மார்த்தமான காரியத்திற்காகச் செய்வது ஔபாசனம், வைஸ்வதேவம்.

தன் மனைவிக்காகச் செய்வது பும்ஸவனம், சீமந்தம். தம்பதிகள் இருவருக்காகவும் செய்வது ஸ்தாலீபாகம் முதலியன. புத்திரனுக்காக செய்வது ஜாதகர்மா முதலியன. ஸமித் ஹோம கார்யங்களில் அக்னி பகவான் நிற்பதாகவும், அன்ன ஹோம காலத்தில் உட்கார்ந்திருப்பதாகவும், நெய் ஹோம காலத்தில் படுத்திருப்பதாகவும் தியானிக்க வேண்டும்.

## ஸ்வாஹா, ஸ்வதா

அக்னியில் ஆஹுதி செய்யும்போது ஸ்வாஹா, ஸ்வதா என்று சொல்லபப்படுகிறது. சப்தசதியயில் பிருமம்மா அம்பிகையை துதிக்கையில்,

த்வம் ஸ்வதா த்வம் ஸ்வதா த்வம்ஹி
வஷட் காரா: ஸ்வராத்மிகா

என்று குறிப்பிடுகிறார்.

தேவர்களுக்கு ஆஹூதி செலுத்துகையில் "ஸ்வாஹா" என்றும் பித்ருகளுக்கு சிரார்த்தம் முதலியவற்றில் "ஸ்வதா" என்றும் கூறவேண்டும். ஸ்வாஹா என்று தேவர்களுக்கு ஆஹூதி செய்வதே வேத வழிபாட்டுமுறை எங்கும் பிரளயம் ஆனதால் வேள்வி செய்ய வசதி இல்லை. எனவே மானஸீகமாக ஸ்வாஹா என்ற சொல்லாலே பிரும்மா யாகம் செய்து விடுகிறார். பிரும்மனுக்கு அம்பிகைதானே தாய். ஆகவே "ஸ்வதா" என்றும் கூறினார்.

ஸ்வ ஆஹ என்பதே ஸ்வாஹா ஆயிற்று. ஸ்வ ஆஹ என்றால் தானே பேசிய பேச்சு என்று பொருள். அதாவது பராசக்தி தனக்குத்தானே தத்துக்கொண்ட சப்த விளக்கமே இப் பரபஞ்ச மாக விரிந்தது. பிரபஞ்ச சிருஷ்டியே ஒரு வேள்விதான். ஸ்வதா என்றால் தன்னியல்பாக ஏற்பட்டது என்று அர்த்தம். தத்துவ ரீதியில் இப்பிரபஞ்ச வாழ்வனைத்துமே பராசக்தி தனக்குத்தானே ஸ்வயமாகத் தத்துக்கொண்ட ஸ்வதாதான்.

தர்வீ (புரச இலை)யால் நெய்யை எடுத்துக்கொண்டு ஜ்வலிக்கும் அக்னியில் வாயு மூலை முதல் அக்னி மூலை நேராக ஒரு ஹோமம் செய்ய வேண்டும். மற்றொரு இலையைக் கொண்டு நெய்யை நிருதி மூலை முதல் ஈசான்யம் வரை ஹோமம் செய்ய வேண்டும். இதற்கு "ஆகார ஹோமம்" என்று பெயர்.

வட கிழக்கில் அக்நயே தென் கிழக்கில் சோமாய என்னும் இரு ஹோமங்கள் செய்ய வேண்டும். இவ்விரண்டும் அக்னி பகவானின் கண்கள்; ஹோமம் செய்யும்போது "ஸ்வாஹா" என்று சேர்த்துச் சொல்ல வேண்டும். இதற்கு "சக்ஷுக்ஷூஸ்மதி" எனப் பெயர் பின்னர் மத்தியில் ஹோமம் செய்வது"முகாஹூதி" எனப் பெயர். அதாவது அக்னிக்கு வாய் ஸ்தானம் இந்த ஹோமம் செய்யும் இடம். இதற்குப் பின்தான் பிரதான ஹோமங்கள். அந்தந்த கர்மா கூறியபடி மந்தரம் தேவதை, திரவ்யம் இவைகளைக் கொண்டு அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும்.

ஸப்ததே அக்நே ஸமித: ஸப்த ஜிஹ்வா
ஸப்த ருஷய: ஸப்த தாமா
ப்ரியாணி - ஸப்த ஹோத்ரா ஸப்த தாத்வா
யஜந்தி ஸப்த யோநீ
ஆப்ருணஸ்வா க்ருதே ந ஸ்வாஹா
அக்நயே ஸப்தவதே இதம் நம:

(ஆஜ்ய ஹோமம் பூர்த்தியாகும்போது சொல்லப்படும் மந்திரம் இது.)

ஓ அக்னியே உமக்காக அரசு, அத்தி, புரசு, வன்னி, விகங்கத, இடி விழுந்த மரம், தாமரை இலை, முதலிய ஏழு ஸமித்துக்கள் ஏற்பட்டன. காலீ, கராளி, மனோஜவா, ஸுலோஹிதா, ஸுதும்னவர்ணா, ஸ்புலிங்கினி, விஸ்வருசீ என ஏழு நாக்குகள் உமக்கு இருக்கின்றன. உமக்கு ஏழு ரிஷிகள் இருக்கின்றனர். "அஸ்வா ரூபம் க்ருத்வா" முதலிய ஸமித்துக்களை சம்பாதிப் பதற்காக ஏற்பட்ட மந்திரங்களே ரிஷிகள் எனப்படுகின்றன.

ஆஹவனீயம், கார்ஹபத்யம், தக்ஷினாக்னி, ஸப்ய, ஆவஸத்ய, ப்ரஜாஹித, ஆக்னித்ரிய என்ற ஏழு பிரியமான இடங்கள் உமக்கு இருக்கின்றன. இவை ஏழும் சோம யாகத்தில் அக்னியை வைக்கும் இடங்களின் பெயர்கள்.

ஹோதா, ப்ரஸாஸ்தா, ப்ராம்மணாச்சம்ஸீ, போதா, நேஷ்டா, ஆக்னீத்ர, அச்சாவாக என்ற ஏழு ஹோதாக்கள் அதாவது வஷட்காரம் செய்பவர்கள் உமக்கு இருக்கிறார்கள்.

அக்னிஷ்டோம, அத்யக்னிஷ்டோம, உக்த்ய, ஷோடஸி அதிராத்ரா, அப்தோர்யாம, வாஜபேய என்ற ஏழு யாகங் களால் உம்மை யாகம் செய்பவர் பூஜிக்கின்றனர்.

வேள்வியில் கூறப்படும் ஸாம வேத மந்திரம் உலகில் பயிர் தான்யம் முதலியவைகளை விருத்தி செய்கிறது. ரிக்வேதம், ஆயுள், ஆரோக்யம் ஆகியவைகளை விருத்தி செய்கிறது.

முதலில் பிரும்மா மனதையே படைத்தார். ஆதலின் மனதும் யக்ஞமும் பிரும்மாவையே தமக்கு அதிஷ்டான தேவதை களாகக் கொண்டன. மனதினால் யாக தேவதைகளை நன்கு தியானம் செய்து கர்மா செய்ய வேண்டும். இரண்டையும் பிரிக்கக்கூடாது. மனதை வேறு இடத்தில் வைத்துக்கொண்டு எந்த கர்மாவையும் செய்யக்கூடாது.

யாகத்தில் முக்கியமாக 17 அக்ஷரங்கள் அடிக்கடி கூறப்படு கின்றன. அந்த மந்திரத்தை அறிந்து செய்தால்தான் பூரண பலன் கிடைக்கும்.

| | |
|---|---|
| ஆஸ்வராய என்பது | 4 |
| அஸ்து ஸ்ரெளஷட் என்பது | 4 |
| யஜ என்பது | 2 |
| யே ய ஜா ம ஹே என்பது | 5 |
| வஷட் என்பது | 2 |
| ஆக | 17 எழுத்துக்கள். |

யாகம் அல்லது இஷ்டி கர்மாவில் எஜமானனுக்காக வேலை செய்பவர் 4 பேர்.

அத்வர்யு :- யஜமான பிரதிநிதியாக ஹோமம் முதலிய சகல காரியங்களையும் செய்பவர்.

ப்ரும்மா :- கர்மாவில் குற்றம் நேராமல் கவனிப்பதுடன் அவ்வப்போது இதைச் செய் என்று உத்திரவளிப்பவர்.

ஹோதா :- தேவதைகளை அழைத்து அவர்களது குணங்களைப் போற்றுபவர்.

ஆக்நீத்ரர் :- அக்னியைக் காத்துக் கொண்டு பாத்ர சுத்தி முதலிய பணிவிடைகளைச் செய்பவர்.

அக்னியை மிக சந்தோஷப்படுத்தும் மந்திரம் இது:

சதுர்பிஸ்ச சதுர்பிஸ்ச த்வாப்யாம் பஞ்சபிரேவ ச
ஹூயதே ச புநர் த்வாப்யாம் ஸ நோ விஷ்ணு: ப்ரஸீதது

நான்கினாலும் நான்கினாலும் இரண்டினாலும் ஐந்தாலும் மறுபடியும் இரண்டாலும் ஹோமம் செய்யப்படும் எங்கும் வியாபகமான பகவான் எனக்கு அருள் புரியட்டும்.

ஆஸ்வராய முதல் வெளஷட் வரை உள்ள 17 எழுத்துக்கள் சகல யாகங்களிலும் அடிக்கடி கூறப்படுவதால் அதன் மகிமையை வேதம் வர்ணிக்கிறது.

பிரும்மாவின் உத்திரவு பெற்று அத்வர்யு "ஆஸ்ராவய" ஆக்நீத்ரரே யாருக்கு ஹோமம் செய்யப் போகிறேனோ அவருடைய காதில் கேட்கும்படி "உமக்கு ஹோமம் நடக்கப் போகிறது என்று கூறும்" என்கிறார். ஆக்நீத்ரர், "அஸ்து

ஸ்ரௌஷட்" என்று உரக்கச் கூறுவார். ஆகட்டும் அப்படியே தேவரிடம் உமக்கு ஹோமம் நடக்கப்போகிறது என்று கூறுகிறோன் என்பதைக் காட்ட "அஸ்து" என்றும் தேவர்களிடம் கூறுவது: "ஸ்ரௌஷட்" என்கிறார். பின் அத்வர்யு "ஓ ஹோதாவே "யஜ" என்கிறார். அதாவது அந்த தேவதையை நாடி "யாஜ்யா" என்ற தேவ ஸ்துதியைக் கூறும் என்று அர்த்தம். "யே யஜா மஹே" -ஓ தேவதையே உம்மை ஸ்துதிக்து வஷட் என ஹோமம் செய்கிறோம்" என்கிறார்.

அக்னி உபஸ்தானம் செய்யும்போது இந்த 17 எழுத்து மந்திரத்தை கூறுவது சிலாக்கியம்.

அக்னி தேவன் எவ்வப்போது திருப்தியடைகிறாள் என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது.

1. கார்ஹபத்யம் - ஆஹவனீயத்துக்கு கொண்டுபோய் வைக்கையில் ஹோமம் செய்தால் அக்னி வசுக்கள் ரூபமடைந்து திருப்திபடுகிறான்.

2. ஆஹவனீயத்தில் வைத்த பிறகு புகைத்துக் கொண் டிருக்கும்போது ஹோமம் செய்தால் ருத்ரரூபியாக இருந்து திருப்தியடைகிறாள்.

3. அக்னியைப் பலப்படுத்தும் சமித்துகளில் முதன் முதலில் கிளம்பும் ஜ்வாலையில் ஹோமம் செய்தால் ஆதித்ய ரூபமாகி திருப்தியடைகிறான்.

4. ஸமித்துகள் நான்கு புறமும் பிடித்து ஜ்வலிக்கும் போது ஹோமம் செய்தால் விஸ்வதேவர் ரூபியாக இருந்து திருப்தியடைகிறான்.

5. ஸமித்துகள் எல்லாமே ஒன்றாக பிடித்து எரியும்போது ஹோமம் செய்தால் இந்திரரூபியாகவும்.

6. தனலாக மாறி ஜ்வாலை அடங்கியதும் ஹோமம் செய்தால் பிரஜாபதி ரூபியாகவும்.

7. சாம்பல் பூத்திருக்கும் அக்கினியில் ஹோமம் செய்தால் பரப்பிரம்ம ரூபியாகவும் இருந்து திருப்தியடைகிறான்.

## சமித்துகளை ஹோமம் செய்வதேன் ?

மரத்தின் உள் அக்னி மறைந்திருக்கிறது. சமித்தை அக்னியில் இடுவதால் அதன் பாகங்கள் பஸ்மமாகி அதிலுள்ள சிறிய அக்னி பெரிய அக்னியில் கலந்துவிடுகிறது. அதேபோல உடலிலிருக்கும் ஆத்மாவை பரஞ்சோதியாகிய பரம்பொருளுடன் சேர்ப்பதையும் அப்படி சேர்ப்பதால் சர்வமும் நாராயண ஸ்வரூபமாக காணும் நிலையை மனிதன் அடையவேண்டும் என்பதையே இந்த ஹோமம் விளக்குகிறது.

விஸ்வ ஹோமம் - வில்வம் இலை மூன்றாகவே சேர்ந்திருக்கும். அதை நெய்யில் தோய்த்து ஹோமம் செய்வது, மண், பெண் பொருள் ஆகிய ஆசைகளை பக்தியினால் ஆண்டவனிடம் அர்ப்பணிக்க வேண்டும் என்பதே உட்கருத்து.

ஆஜ்ய சம்ஸ்காரம் - தேவதைகளுக்கு ஆகாரமாக அளிக்கும் நெய்யை சுத்தம் செய்த பின்பே ஹோமம் செய்யவேண்டும்.

ஹோமத்திற்காக பிரதிஷ்டை செய்த அக்னி உக்கிரமாகவே இருக்கும். அதில் நெய்யை சுத்தம் செய்ய உருக்கினால் ஹோமம் செய்பவருடைய பத்னிக்கு தீங்கு நேரிடும். ஆகவே ஒரு சிறிது அக்னியைத் தனியாக எடுத்து வடக்குப் புறத்தில் வைத்து ஸம்ஸ்காரம் செய்ய வேண்டும்.

ஒரு தர்ப்பத்தைக் கொளுத்தி அதன் மீது காட்டினால் அது எல்லாவற்றிற்கும் நெய்யால் அபிகாரம் செய்வதால் உண்டாவது போன்ற சக்தியைக் கொடுக்கிறது. இரு தர்பாக்ரங்களை நெய்யில் போடவேண்டும். மது, கந்தரஸ என்ற இரு அரக்கர்கள் ஆஜ்பரசத்தை அபகரித்துச் செல்வார்கள். இந்த தர்ப்பாக்ரகங்கள் அவர்களை கிட்ட அண்டாதபடி தடுக்கும்.

தர்ப்பத்தைக் கொளுத்தி மும்முறை சுற்றி எறிவதால் ராக்ஷஸர்கள் அண்ட முடியாது போவதுடன் ஹோமம் செய்வதற்கேற்ற யோக்யதையும் நெய்க்கு ஏற்படுகிறது.

தேவி யக்ஞத்தில் அன்னைக்கு அர்ப்பணிக்கப்படும் ஆஹூதி திரவியங்கள், அன்னம், ஆஜ்யம், சமித்து, லாஜம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

# தில ஹோமம்

நாம் அனுபவிக்கும் துன்பங்களுக்கு மூல காரணமான பற்பல பாபங்களைப் போக்கி இஷ்டார்த்தங்களைக் கொடுக்கும் சக்தி வாயந்தது திலங்களால் (எள்) செய்யப்படும் ஆஹூதிகள் என்று மந்திர சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது.

டாமராதி தேவி தந்திரங்களும் காம்யமாகவும். நிஷ்காம்ய மாகவும் சுக்ல (வெள்ளை) திலத்தையும் கிருஷ்ண (கறுப்பு) திலத்தையும் ஆஹூதி செய்யவேண்டும் என்று சொல்லுகின்றன.

கருதி ஸிரஸ் என்று சொல்லப்படும் தைத்ரீய நாராயண உபநிஷத்தில், ஆத்ம ஞானம் பெற விரும்புவர்கள் உள்பட, பாபத்தை விலக்கி மோக்ஷச்ரீயை அடைவதற்கு தில ஹோமமே சிறந்தது என்று குறிப்பிட்டுள்ளது.

தில ஹோமத்தைக் கூறும் தைத்ரீய உபநிஷத் மந்திரங்கள் ஆறும் பின் வருமாறு :

1. திலான் ஜுஹோமி ஸரஸான் ஸபிஷ்டான்
   கந்தாரமம சித்தே ரமந்து ஸ்வாஹா

2. காவோ ஹிரண்யம் தனமன்ன பானம்
   ஸர்வேஷாம் ச்ரியை ஸ்வாஹா

3. ச்ரியஞ்ச லக்ஷ்மிஞ்ச புஷ்டிஞ்ச கீர்த்திஞ் சானருண்யதாம்
   ப்ரஹ்மண்யம் பஹு புத்ரதாம் ச்ரத்தா
   மேதே ப்ரஜாஸ்ஸந்தாது ஸ்வாஹா

4. திலா க்ருஷ்ணாஸ் திலாச்வேதாஸ் திலாஸ:
   ஸௌம்யா வசானுகா
   திலா: புனந்து மே பாபம் யத்கிஞ்சித் தூரிதம் மயி ஸ்வாஹா

5. சோரஸ்யான்னம் நவச்ராத்தம் ப்ரஹ்மஹா குரு தல்பக:
   கோஸ்தேயம் ஸுராபானம் ப்ருணத்யா திலா:
   சாந்திரம் சமயந்து ஸ்வாஹா

6. ச்ரீஸ்ச லக்ஷ்மீஸ்ச புஷ்டிஸ்ச கீர்த்திம் சான்ருண்யதாம்
   ப்ரஹ்மண்யம் பஹுபுத்ரதாம் ச்ரத்தா மேதே ப்ரஞ்ஞாது
   ஜாதவேதஸ் ஸந்ததாது ஸ்வாஹா

பொருள்: ஓ பரமாத்மாவே (ஓ பரதேவதையே) உன் பொருட்டு சத்துமா, தேன் முதலிய மதுர த்ரவியங்களுடன் திலங்களை (எள்ளுகளை) ஆஹூதி செய்கிறேன். பரமபாவனமான உனது சகல கல்யாண குணங்களும் என் மனதில் நிலைத்திருக்க

வேண்டும். 2. நான் செய்யும் திலாஹுதியினால் திருப்திகொண்ட பரமாத்மாவின் (பரதேவதையின்) கருணையால் பசுக்கள், பொன், பொருள், அன்னபானம் முதலியவும் கஜ, அச்வ போக போக்யங் கள் யாவும் எனக்கு ஸித்திக்க வேண்டும். 3. ராஜ்ய லக்ஷ்மி, மோக்ஷலக்ஷ்மி, சரீர புஷ்டி, மூவுலகும் போற்றும் கீர்த்தி, தேவ, ரிஷி, பித்ருக்களின் கடனில்லாமை, ப்ரம்ம தேஜஸ், வேதாந்தங்களிலும் நம்பிக்கை, வேத சாஸ்திரங்களின் க்ரஹண, தாரணசக்தி இவைகளைக் கொடுக்க வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன். 4. சர்வ மங்களகரமான கிருஷ்ண திலம் (கருப்பு எள்), ச்வேத திலம் (வெள்ளை எள்) ஆகியவை என்னிட முள்ள ஸகல பாபங்களையும் போக்கி என்னைப் புனிதமாக் கட்டும். 5. திருட்டு சொத்தால் பெற்ற அன்னம், பரான்ன போஜனம், ப்ரும்மஹத்தி பாபம், குரு பத்தினி கமன பாபம், பசுக்களைத் திருடிய பாபம், மதுபானம் (கள் குடித்த பாபம்) சிசுஹத்தி, கர்ப்பச் சேதனம் முதலிய மஹா பாபங்கள் யாவற் றையும் ஆஹூதி செய்யப்பட்ட திலங்கள் போக்கட்டும். 6. மூன்றாவது மந்திரங்களில் கூறப்பட்ட அதே பலன்களுடன் நல்ல புத்தியை வேத ஸ்வரூபமாய் ஸகல ஐச்வர்யங்களையும் அளிக்கவல்ல அக்னி ரூபமான, ஹே பரமாத்மாவே (பரதேவ தையே) எல்லாவற்றையும் எனக்குத் கொடுக்க வேணுமாய்ப் பிரார்த்திக்கிறேன் என்று வேதங்கள் திலாஹுதியின் பெருமையை எடுத்துக் கூறுகின்றன.

பல மஹா பாபங்களின் காரணமாய் பற்பல கஷ்டங்களை அனுபவித்து வருபவர்களின் கஷ்டங்களை அறவே தவிர்த்துக் காத்து ரக்ஷிக்கும் புவனேஸ்வரி தேவியின் ப்ரஸாதமான அஷ்ட ஐச்வர்யங்களையும் எளிதில் பெறுவதற்கு திலாஹுதிகளே முக்கியமாகும் என்று வேதம் கூறுகின்றதை நாம் மறந்து விடலாகாது.

---

மனோவ்ருந்திரஸ்து ஸ்ம்ருதிஸ்தே ஸமஸ்தா
ததா வாக்பரவ்ருத்தி: ஸ்துதி: ஸ்யான் மஹேசி |
சரீரப்ரவ்ருத்தி: ப்ரணாம் க்ரியா ஸ்யாத
ப்ரஸீத க்ஷமஸ்வ ப்ரபோ ஸந்ததம் மே |

—ஆதிசங்கரர்

நான் விஷயங்களை எல்லாம் நினைப்பதுயாவும் ஓ புவனேச்வரி, தங்களை ஸ்மரிப்பதாகவே ஆகட்டும். ஓ மஹேச்வரி, என் வாக்கிலிருந்து வரும் சொற்கள் யாவும் தங்களைக் குறித்து செய்யும் ஸ்துதியாக ஆகட்டும். என் சரீரத்தால் செய்யப்படும் கார்யம் தங்களுக்கு செய்யும் நமஸ்காரமாக ஆகட்டும். தாயே அருள் புரியவேண்டும். எப்போதும் நான் செய்யும் குற்றங்களை பொறுத்தருளவேண்டும்.

# ஸ்ரீ புவனேச்வரி அஷ்டோத்ரம் 10

ஓம் ஹ்ரீம் என்பதை 108 நாமாக்களின் முன்பும் சேர்த்துப் படிக்கவும்.

புவனேச்வர்யை நம:
ஏகார ரூபாயை நம:
பவாயை நம:
ஸர்வமங்களாயை நம:
அஷ்டைச்வர்யப்ரதா
யின்யை நம:
அம்பிகாபுரவாசின்யை நம:
ஸுப்ரமண்ய ஹ்ருதயாயை நம:
யோகித்யேயாயை நம:
முனிஸம்ஸேவ்யாயை நம:
வேதாந்த லக்ஷணாயை நம: 10

நவார்ணமனுஸ்துதாயை நம:
வாக்பீஜஸ்வரூபிண்யை நம:
காமபீஜஹ்ருதயாயை நம:
பிந்துநாதஸ்வரூபிண்யை நம:
ஷோடசபத்ர நிலயாயை நம:
த்ரிகோணமத்ய நிலயாயை நம:
வ்ருதத்ரயஸ்வரூபின்யை நம:
மங்களகணேச ஜனன்யை நம:
ஸனகாதிமுனிஸ்துதாயை நம:
சாந்திஸ்வரூபின்யை நம: 20

சிதம்பரசரீரிண்யை நம:
வைத்யநாதக்ருஹிண்யை நம:
ஏகாம்பரசரீரிண்யை நம;
கமலாலய வாஸின்யை நம:
பாண்டயராஜ ஸ்துதாயை நம:
மார்க்கண்டேயவரப்ரதாயை நம:
புண்டரீகபுராதீசாயை நம:
வில்வவனப்ரியாயை நம:
சிவதாண்டவ ஸாக்ஷிண்யை நம:
சிவப்ரஸாத ஸம்பன்னாயை நம:

சிவசைலகுமாரிகாயை நம:
சிவானந்தரஸார்ணவாயை நம:
சிவாந்த புரவாஸின்யை நம:
சிவஸாம்ராஜ்யதாயின்யை நம:
சிவானந்தரஸாதாராயை நம:
சிவகௌர்யை நம:
சிவபோகதாயை நம:
ப்ரம்மபூஜிதாயை நம:
திவ்யஸுந்தர்யை நம:
பத்மவாஸன்யை நம: 40

வேதஸ்வரூபாயை நம:
குமாரஜனன்யை நம:
பிந்துஸ்வரூபிண்யை நம:
சரணாகதரக்ஷணாயை நம:
அனுக்ரஹப்ரதாயை நம:
சந்த்ரலோகவிபூஷிதாயை நம:
ஸர்வலோகவசங்கர்யை நம:
ஸுராஸரநமஸ்கிருதாயை நம:
மூலாதாரகதாயை நம:
ஸுஷும்னாத்வாரமத்
யாயை நம: 50

சதுர்வக்கபலப்ரதாயை நம:
ஆத்மாராமாயை நம:
பஞ்சதசாக்ஷர்யை நம:
மணிபூரகஸுந்தராயை நம:
ஆதாரசக்திரூபிண்யை நம:
ஆர்தஜனரக்ஷிண்யை நம:
ஆர்யகணஸ்துதாயை நம:
ஆர்யாவர்த்தநிவாஸின்யை நம:
ஆத்யந்த சிவரூபாயை நம:
ஆதி தத்வப்ரகாசாயை நம: 60

ஸ்ரீவித்யாமந்த்ர ரூபாயை நம:
சதுர்வேதாந்த வேத்யாயை நம:
ச்யாமளாபீடவாஸாயை நம:
மஹாமாயாஸ்வரூபாயை நம:
ரத்தின மந்திர வாஸாயை நம:
மல்லிகாதாமபூஷாயை நம:
மந்தாகினி ஸ்வரூபாயை நம:
மௌக்திகாபலஹாராயை நம:

சிவவூமாங்கஸம்ஸ்தாயை நம:
கஜாஸ்யகுஹபாலின்யை நம: 70
ஸம்ஸாரரோக நாசின்யை நம:
வீணாகானப்ரவீணாயை நம:
கோணத்ரய நிவிஷ்டாயை நம:
மூலமந்த்ரஸ்வரூபாயை நம:
சிதக்னிபூதேஹாயை நம:
சிவசக்த்யைக்யவேஷாயை நம:
சாச்வதைச்வர்யஸுகதாயை நம:
துஷாரகிரிநிவாஸாயை நம:
சிவமானஸஹம்ஸின்யை நம:
ஸ்வர்ணதாடங்க
சோபிதாயை நம: 80
தாடிமீபீஜரதனாயை நம:
சங்கக்ரீவாயை நம:
வடபத்ரோதராயை நம:
ரிஹமபூஷிதவிக்ரஹாயை நம:
ஸௌந்தர்யகுணஸம்யு
தாயை நம:
ஜாலந்தரமஹாபீடாயை நம:
பூரணகிரிபீடவாஸின்யை நம:
சதுஷ்ஷஷ்டிகலாத்மிகாயை நம:
ஸர்வதோஷவிநாசின்யை நம:
மந்தஸ்மித முகாம்பு
ஜாயை நம: 90
கல்யாணநிலயாயை நம:
கபலக்ஷ்ண ஸர்பன்னாயை நம:
சுபஸௌபாக்ய நிலயாயை நம:
தக்ஷாத்வரவிநாசின்யை நம:
ஸதாவிச குடும்பின்யை நம:
ஸச்சிதானந்தலக்ஷணாயை நம:
சந்த்ரமண்டலவாஸின்யை நம:
கலபாஷிண்யை நம:
துரிதாபஹாயை நம:
ஸர்வ ஸ்வதந்த்ராயை நம: 100
மதங்குல பூஷணாயை நம:
மதங்கமுனிஸம்பூஜ்யாயை நம:
கதம்பாரண்ய நிலயாயை நம:
காமகோடிபீடஸ்தாயை நம:
மனோவாசாமகோசராயை நம:
சரணாகத ரக்ஷிண்யை நம:
ஹ்ரீங்காரபீடஸ்தாயை நம:
ஹ்ரீங்காரசாந்த
நிலயாயை நம: 108

## புவனேஸ்வரீ மந்திர ஜபம்

அஸ்ய ஸ்ரீ புவனேஸ்வரீ மஹா மந்திரஸ்ய சக்தி ரிஷி:
காயத்ரீ சந்த: புவனேஸ்வரீ தேவதா ||
ஹ்ராம் பீஜம் ஹ்ரீம் சக்தி: ஹ்ரூம் கீலகம் புவனேஸ்வரி
ப்ரசாத ஸித்தியர்த்தே ஜபே விநியோக: ||
இதி கரன்யாஸ: அங்கந்யாஸச்ச பூர் புவஸ்ஸுவரோம்
இதி திக்பந்த: ||

த்யானம் : பாலரவி த்யுதிமிந்து க்ரீடாம் துங்க குசாம் நயனத்ரய யுக்தாம் ஸ்மேரமுகீம் வரதாங்குச பாசா பீதிகராம் ப்ரபஜே புவனேசீம். லம் இத்யாதி பஞ்ச பூஜா.

மூலமந்திரம் ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம்
பூர்புவஸ்ஸுவ ரோமிதி திக்பந்த:
லம் இத்யாதிபஞ்ச பூஜா.

## ஆதிசங்கரர் செய்த ஸ்தோத்திரம்

ப்ரஸீத ப்ரபஞ்சஸ்வரூபே ப்ரதா நே
ப்ரக்ருத்யாத்மிகே ப்ராணி நாம் ப்ராண ஸம்க்ஞே
ப்ரணோதும் ப்ரபோ ப்ராரபே ப்ராஞ்ஜலிஸ் த்வாம்
பிரக்ருத்யா ப்ரதர்க்கே ப்ரகாம ப்ரவிருத்தே ||

பிரபஞ்ச உருவாக இருப்பவளே. உலகிற்கு காரணமாக இருப்பவளே, மாயா சக்திரூபமாக இருப்பவளே, பிராணிகளின் உயிராய் இருப்பவளே, மாயா காரியமான பிரபஞ்சத்தால் ஊகிக்கத் தகுந்தவளே, தன் இஷ்டபடி காரியங்களைச் செய்பவளே, புவனேஸ்வரி தாயே! பிரசன்னமாக வேண்டும். தங்களை ஸ்துதி செய்யத் துடங்குகிறேன்.

ஸமுத்யத்திவாக்ருத் ஸஹஸ்ர ப்ரபாஸா
ஸதானந்தா சேஷ் விச்வாவகாசே
லஸன் மௌளிபந்தேந்து ரேகே ஸ பாசாங்குசா
பீஷடாத்த ஹஸ்தே நமஸ்தே ||

உதயமாகிற ஆயிரம் சூரியன்களின் காந்தியால் எப்போதும் எல்லா உலகங்களிலும் இடைவெளிகளிலும் நன்கு பரவி இருப்பவளே, பிரகாசிக்கின்ற தலையில் சந்திர கலையை தரித்தவளே, பாசம், அங்குசம் என்ற ஆயுதங்கள் அபய வரத முத்திரைகள் இவைகளை கைகளில் உடையவளே, உங்களுக்கு நமஸ்காரம்.

# முடிவுரை

தடித்த ஓர் மகனை தந்தை யீண்டு அடித்தால்
தாய்உடன் அணைப்பாள்; தாய் அடித்தால்
தந்தை அணைப்பான் இங்கு எனக்குப்
பேசிய தந்தையும் தாயும் பொடித்திருமேனி அம்பலத்து
ஆடும் புனிதன் நீ ஆதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திட வேண்டும்
அம்மையப்பா இனி ஆற்றேன்.

- திரு அருட்பா

நம்மை காப்பாற்றுவதற்காக அம்பிகை கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாள். அதை நாம் அறியாமல் இருப்பது யார் தவறு?

அரண்மனையில் மகாலக்ஷ்மியாகவும், யுத்தத்தில் ஜெயலக்ஷ்மியாகவும், பிரயாணத்தின்போது காப்பாற்றும் ஜகத்ரக்ஷகியாகவும் துஷ்டமிருகங்கள் பாம்புகள் சூழ்ந்த காடுகளில் சபரியாகவும், பூதப் பிரேத பிசாசுகளால் பயமேற்படும்போது மகாபைரவியாகவும் சித்தப்பிரமை ஏற்பட்டபோது திரிபுராவாகவும் சமுத்திரம் நதி முதலியவைகளில் சிக்கிக் கொள்ளும்போது தாராவாகவும் அம்பிகை புவனேஸ்வரி ரக்ஷிக்கிறாள்.

இந்த உலகில் ஆபத்துகள் சூழ்ந்த வண்ணமிருக்கின்றன. இவைகளை அம்பிகை தான் நீக்கமுடியும். அவளுக்கு ஸர்வாபத் நிவாரணி என்றே ஒரு பெயர். பல வியாதிகள் பயம் காரணமாக ஏற்படக்கூடும். அவைகளை எல்லாம் மருந்தினால் மட்டும் போக்க முடியாது. அவள் அருள் வேண்டும். அவளுக்கு ஸர்வ வியாதி பிரசமனீ என்று ஒரு நாமா உண்டு. அதேபோல சர்வ மிருத்யு நிவாரிணி என்னும் ஒரு நாமா இருக்கிறது. மரணம் ஏற்பட பல காரணங்கள் உண்டு. அவைகளை எல்லாம் அம்பிகை நிச்சயம் போக்குவாள்.

யான் பெற்ற இன்பம் இவ்வையகம் முழுவதும் பெற வேண்டும் என்ற கருணையினால் நமது குருநாதர் ஸ்ரீ சத்குரு சாந்தானந்த சுவாமிகள் ஸ்ரீ குருவின் கிருபா கடாக்ஷத்தையடையவும் உலகமாயையில் உழன்றுக் கொண்டிருக்கும் நம்மை கரையேற்ற வேண்டி, தாய் குழந்தைகளுக்கு விளையாட்டுகாட்டி இனிய சொல்லால் மருந்து அளிப்பது போல வருஷம் தவறாமல் பெரும் ஆன்மிக திருவிழா யக்ஞாதிகளை நடத்தி நம்மை ஈடுபடச் செய்து. ஆத்மானந்தத்தை வாரிவழங்குகிறார்கள். இதில் ஒவ்வொருவரும் கலந்துக் கொண்டு ஸ்ரீ மாதா புவனேஸ்வரியின் பரிபூரண அனுக்கிரகத்திற்குப் பாத்திரர்களாகும்படி கோருகிறேன்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

சுபம்.

# ஸ்ரீ வித்யா புத்தகங்கள்

சரியை :

ஸ்ரீ சக்ர நாயகிகள்
ஸ்ரீ வித்யா மகாயாகக்ரமம்
தேவி நவாவரண பூஜை

கிரியை :

சண்டி ஹோம விதானம்
ஸ்ரீ வித்யா ஹோமம்
(லகு பூஜையுடன்)

யோகம் :

குண்டலினி சக்தி
ஆறாதாரங்களில் அம்பிகை

ஞானம் :

தேவி மானஸ பூஜை
வரிவஸ்யா ரகசியம்

விவரங்களுக்கு :

பிரதிபா பிரசுரம்
"லலிதாலயா"
95/1 ஆடம் தெரு, மயிலாப்பூர்
சென்னை – 600 004 போன் : 24640720

# பிரதிபாவின் இதர புத்தகங்கள்

கருணை காமாக்ஷி

ஏன் பள்ளி கொண்டீர்?

தீப தரிசனம்

வாழ்க்கை தத்துவங்கள்

பாராயண மாலா

கண் கண்ட தெய்வம் கருமாரி

தேவி காயத்ரீ

தீர்க்க சுமங்கலி பவ

ஸ்ரீ வித்யா மகாயாகக்கிரமம்

தேவி நவாவரண பூஜை

குஞ்சிதாங்ரி ஸ்தவம்

விவரங்களுக்கு :

**பிரதிபா பிரசுரம்**

"லலிதாலயா"

95/1, ஆடம் தெரு, மயிலாப்பூர்,

சென்னை 600 004. போன்: 24640720